# சிலப்பதிகார விருந்து

(நாட்டுப்பற்று)

ந. சஞ்சீவி, எம். ஏ.,
தமிழ்த்துறைத் தலைவர், பச்சையப்பர் கல்லூரி,
காஞ்சீபுரம்.

சாமி நிலையம்,
23, பிள்ளையார் கோவில் தெரு,
வரகநேரி—திருச்சிராப்பள்ளி.

முதற்பதிப்பு: ஜூன், 1956.



ஆசிரியரின் மற்ற நூல்கள்:

சங்ககாலச் சான்றோர்கள்

மானங்காத்த மருது பாண்டியர்

வேலூர்ப் புரட்சி

மருதிருவர்

காற்றிலே மிதந்தவை (அச்சில்)

கவிஞர் தரும் காட்சி ( ,, )

விலை ரூ. 2—8—0

*சென்னை சர். தியாகராயர் கல்லூரித் தலைவர்*

பேராசிரியர் **எம். கே. சண்முகம்,** எம். ஏ., எல். டி., **அவர்கள்**

## அணிந்துரை

---

*இன்றைய தமிழகத்தின் இலக்கிய ஆராய்ச்சி சீரிய முறையில் வளர்ந்து வருகின்றது. அதற்குக் காரணம் ஆசிரியர் ந. சஞ்சீவியைப்போன்ற தமிழ் அறிஞர்கள் கலையுணர்ச்சியோடு செய்யும் தொண்டு தான். தமிழ் இலக்கிய ஆராய்ச்சிக்குத் தற்போதைய சூழ்நிலையில் இன்றியமையாதது ஆங்கிலக் கலை அறிவு என்பது என் மனத்தில் படுகின்றது. இதை அளவு கோலாகக் கொண்டு நமது தமிழ் நாட்டுச் செல்வங்களாகிய திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்பராமாயணம் முதலிய ஒப்பற்ற காவியங்களின் உயர்வையும் பெருமையையும் எளி தில் அறியலாம். ஆங்கிலக் கண்களோடு பார்க்கும் திறமை ஆசிரியர் சஞ்சீவிக்கு இயல்பாக அமைந் திருக்கின்றது. அமரத்துவம் பெற்ற ஷேக்ஸ்பியர், மில்டன், வார்ட்ஸ்வொர்த்து, ஷெல்லி, கீட்ஸ், பைரன் போன்ற ஆங்கிலக் கவிஞர்களைப் படித்து, ரசித்து அவர்கள் சித்திரித்துள்ள கருத்தோவியங்களைத் தமிழ்க் கவிதைகளிலும் கண்டு இன்புறும் வாய்ப் பைப் பெற்றிருப்பதன் பயனாக, சிலப்பதிகார ஆராய்ச்சியில் மிக்கஆர்வத்துடன் சஞ்சீவி அவர்கள் ஈடுபட்டிருக்கின்றார்கள். கடுகளவு போன்ற குறளில் கடல்போன்ற கருத்துக்கள் எவ்வாறு மிளிர்கின்ற னவோ, அவ்வாறே சித்திரச் சிலப்பதிகாரமும் சொல்லழகும், பொருளழகும், கற்பனைத் திறனும், காதல் உணர்ச்சியும், கற்பின் வீறும் ஒருங்கே*

அமைந்து இரத்தினங்களாலிழைத்த விலையுயர்ந்த ஆபரணம் போல மிளிர்கின்றது. இவ்வாறு அழகுடன் துலங்கும் சிலம்பை வருணிக்கும் பணியை மேற்கொண்டிருக்கும் ஆசிரியர், காவியத்தில் **நாட்டுப் பற்று, ஒற்றுமை வேட்கை, பத்தினி வழிபாடு, பண்பு நலன்கள், வரலாற்றுப் பெருமை, இலக்கிய வளம்** போன்ற உயரிய மனித இலக்கிய இயல்புகளைக் காண்கின்றார். தாம் அவைகளைச் சுவைப்பதுமல்லாமல் மற்றவர்களும் அந்தப் பேரின்பத்தை நுகரவேண்டுமென்றும் ஆசைப்படுகின்றார். இவர் கையாளும் முறையும் போற்றத்தக்கது. எவ்வாறு ஷேக்ஸ்பியர் நாடகங்களில் பலப்பல நுணுக்கங்களை ஆய்ந்து மனக்கிளர்ச்சி அடைகின்றோமோ, அவ்வாறே சிலப்பதிகாரத்திலும் ஆய்ந்து மகிழும்படி ஆசிரியர் நம்மை இழுத்துச் செல்கின்றார். அவருக்கு நமது நன்றி உரித்தாகுக. ஆசிரியர் தமிழ்த்தாய்க்குச் சிறந்த பணிகளை ஆற்றித் தமிழக வரலாற்றில் ஒரு தனி இடம் பெறவேண்டுமென்று மிகவும் விழைகின்றேன்.

தமிழ் வாழ்க !

**ம. கி. சண்முகம்**

# நன்றியுரை

பழந்தமிழ் இலக்கியங்களைப் புதிய கண்ணோட்டத்துடன் ஆராய்ந்து தமிழ் மக்கட்குப் பயன்படுமாறு செய்ய வேண்டுமென்பது நெடுநாட்களாக என் நெஞ்சில் நிலைத்துவிட்டதோர் ஆவலாகும். அதன் பயனே 'சிலப்பதிகார விருந்து'. இவ்வரிசையில் 'நாட்டுப் பற்று' என்னும் தலைப்பில் வெளிவரும் இந்நூலைத் தொடர்ந்து இன்னும் ஐந்து புத்தகங்கள் வெளி வரும். அவையனைத்தும் சேர்ந்து 'நெஞ்சையள்ளும் சிலப்பதிகார'த்தின் தன்னேரில்லாத் தன்மையைத் தமிழ் மக்கள் உணர்ந்து போற்றி இன்புறப் பெருந்துணை புரியும் என்று நம்புகின்றேன். தமிழ் அன்னை அருள் புரிவாளாக!

இந்நூலிலுள்ள கட்டுரைகளுட் சில ஏற்கெனவே 'தமிழ் முழக்கம்' என்ற மாதமிருமுறை இதழில் வெளிவந்தவை. அவற்றை அப்போது தொடர்ந்து படித்து மகிழ்ந்த நண்பர்கள் எனக்களித்த ஊக்கமே சிலப்பதிகார ஆராய்ச்சித்துறையில் என்னை ஈடுபடுத்தக் காரணமாய் அமைந்தது. 'தமிழ் முழக்கம்' இதழில் என் கட்டுரைகளை வெளியிட்டுதவிய அவ்விதழின் ஆசிரியர்க்கும், அக்கட்டுரைகளைப் படித்து என்னைப் பல்வகையாலும் ஊக்கிய நண்பர்கட்கும் 'சிலப்பதிகார விருந்து' நூல் வடிவாக வெளி வரும் இந்த நல்ல சந்தர்ப்பத்தில் என் மனமுவந்த நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

இந்நூலினைப் படித்துப்பார்த்து அரியதோர் அணிந்துரை வழங்கி என்னை வாழ்த்தி அருளி

யுள்ள என் அருமைப் பேராசிரியரும் தமிழ்ப் பெருந் தகையாருமாகிய உயர்திரு. **ம. கி. சண்முகம், எம். ஏ., எல். டி.,** அவர்கட்கு யான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். தமிழ் இலக்கிய வளர்ச்சியிலும் என் போன்ற தமிழ் இளைஞர்களின் முன்னேற்றத்திலும் தணியாக்காதல் கொண்டுள்ள அப்பெருமகனாரின் அணிந்துரை இந்நூலுக்குக் கிடைத்தது யான் பெற்ற பெரும்பேறு என்றே கருதுகின்றேன்.

'சிலப்பதிகார விருந்து' வரிசையில் வெளிவரும் நூல்களை அழகிய முறையில் வெளியிட்டுத் தமிழகத்தாரின் அன்பையும் ஆதரவையும் பெறப் பேராவல் கொண்டுள்ள '**சாமி நிலைய**'த்தார்க்கு என் நன்றி கலந்த நல்வாழ்த்துக்கள் உரியன. இந்நூல் அச்சாகும் காலத்தில் ஒப்பு நோக்குதலாகிய அரிய பணியைச் செம்மையாகச் செய்துதவிய என் மதிப்பிற்குரிய ஆசிரியப் பெருந்தகை உயர்திரு. **மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை** அவர்கட்கு என் பணிவார்ந்த வணக்கங்கள் உரியன. தம் கை வண்ணத்தின் திறத்தால் இந்நூலின் மேலட்டையைப் பொலிவு பெறச் செய்துள்ள ஓவியர் திரு. **எஸ். ராஜம்** அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றி உரியதாகுக.

வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்!

**ந. சஞ்சீவி**



*பொன்னுடல் நீத்துப் புகழ் உடல் தாங்கி விளங்கும்*

**கவி மணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களின்**

*திருவடிகட்கு.*



# உள்ளுறை

# 1. திருமண வாழ்த்து

முத்தமிழ்க் காப்பியமாகிய சித்திரச் சிலப் பதிகாரத்தின் முதல் காதையாய் விளங்கும் பெருமை சான்றது **மங்கல வாழ்த்துப் பாடல்.** மூன்று பெருங்காண்டங்களாகப் பாகு பாடுற்று விளங்கும் செல்வச் சிலப்பதிகாரத் தின் முதற்காண்டமாகிய புகார்க் காண்டத்தின் தலைவாயிலாய் அமைந்துள்ள இம்முதற்காதை, கற்பரசி கண்ணகியும் கலைச்செல்வன் கோவல னும் கடிமணம் புரிந்துகொள்ளும் காட்சியோடு ஆரம்பமாகிறது. ஆம். இளங்கோ அடிகள், காவிய அமைப்பிலுமே புரட்சி புரிந்துள்ளார். இற்றைநாள் இலக்கியங்களில் நவீன முறை என்று நாம் நினைக்கும் ஓர் உத்தியைப் பழந் தமிழ் இலக்கியமாகிய சிலப்பதிகாரத்திலேயே வெற்றிகரமாகக் கையாண்டுள்ளார் புதுமைப் பெரும்பித்தராகிய இளங்கோ அடிகள். காவி

யத்தின் தலைவனையும் தலைவியையும் அவர்கள் திருவவதார நிலையிலிருந்து காட்டாமல், அம் மக்களின் வாழ்க்கையில் காவியத்திற்கு இன்றி யமையாததாய் நடைபெறும் முக்கியமான தொரு நிகழ்ச்சியையே முதற்காட்சியாகக் கொண்டு, நாடகப் பண்போடும் இசைச் சிறப் போடும் இயற்சுவையோடும் இலக்கியத்தைத் தொடங்குவது சாலப்புதுமையானதொரு நெறி யாகும். ஆயினும், இந்நெறியைப் பழந்தமிழ் இலக்கிய நெறியாக—இளங்கோ அடிகளின் புரட்சிப்போக்காக—நமக்கு அறிமுகம் செய்து வைக்கிறது மங்கல வாழ்த்துப் பாடல்.

இயற்கைச் சத்திகளாகிய சந்திரனையும் சூரியனையும் மழையையும் வாழ்த்தி, கற்புக் கடவுளாகிய கண்ணகி பிறந்த சோழவள நாட் டின் தலைநகராகிய பூம்புகாரைப் போற்றி, தம் காவியக் கோவிலை உருவாக்கப் புகுகின் றார் இளங்கோ அடிகள். அந்நிலையில், 'திங் களைப் போற்றுவோம்; ஞாயிற்றைப் போற்று வோம்; மாமழையைப் போற்றுவோம்; பூம்பு காரைப் போற்றுவோம்; ஏனெனில், அவை முறையே சோழ வேந்தனின் குளிர்வெண் குடைபோன்று தண்ணளி புரிதலாலும், அவன் ஆக்கினை சக்கரம் போன்று பொன்னலாய கொடுமுடி படைத்த மேருவை வலம் வருத லாலும், அவன் கருணையைப் போன்று எஞ் ஞான்றும் வளம் சுரத்தலாலும், தொன்று தொட்டு வரும் அவன் குலத்தோடு பொருந்தி

உயர்ந்து பரந்து புகழ்பெற்று விளங்கலாலும்,' என்று வாய் நிறைந்த—மனம் நிறைந்த—சொற்களால் மங்கல வாழ்த்துப் பாடுகின்றார் இளங்கோ அடிகள்:

'திங்களைப் போற்றுதும்! திங்களைப் போற்றுதும்!
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
அங்கண் உலகளித்த லான்.

'ஞாயிறு போற்றுதும்! ஞாயிறு போற்றுதும்!
காவிரி நாடன் திகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்.

'மாமழை போற்றுதும்! மாமழை போற்றுதும்!
நாமநீர் வேலி யுலகிற்கு அவன்அளிபோல்
மேல்நின்று தான்சுரத்த லான்.

'பூம்புகார் போற்றுதும்! பூம்புகார் போற்றுதும்!
வீங்குநீர் வேலி யுலகிற் கவன்குலத்தோடு
ஓங்கிப் பரந்தொழுக லான்.'

(சிலம்பு: மங்கல வாழ்த்து, 1-12.)

என வரும் இச்செய்யுட்களைத் திரும்பத் திரும்பப் படிப்பார் உள்ளம், எடுத்த எடுப்பிலேயே இளங்கோவடிகள் தம் காவியத்தைக் கற்பார் நெஞ்சில் நாட்டுப்பற்றை ஊட்டும் திறத்தை எளிதில் உணர்ந்து போற்றும்.

பழந்தமிழ்க் கலைஞனைப் போன்றே அவன் கால்வழியில் தோன்றிய இளங்கோ அடிகட்கும் வானத்து மதியமும், கதிரவனும், வையங்காக்கும் மாமழையும், மன்பதையின் புகழாய் விளங்கும் பூம்புகாரும், பண்டைப்புக்காலந் தொட்

டே பாருலகில் புகழுடன் பொலிவுற்று விளங்கி வரும் மூவேந்தர் குடியுள்ளும் நடுநாயகமாய்த் திகழும் சோழர் 'குடியையும் அக்குடி புரக்கும் கோவேந்தன் பெருமையையும் அன்றோ நினைவு படுத்துகின்றன! அம்மட்டோ! நாடாளும் திருவுடை மன்னனைப் பரம்பொருளின் அமிசமாகக் காணல் பத்தர்கள் இயல்பு எனில், இயற்கைச் சத்திகளின் திறத்திலும் தன் தாயகத்தின் தலைவனது தனிப்புகழைக் காண்பதே தேச பத்தனின் இயல்பு என்பதை இளங்கோ அடிகளின் வாக்கு நமக்குப் புலப்படுத்துகின்றது.

சிலப்பதிகாரக் கதை பூம்புகாரில் தொடங்குகின்றது. அப்பூம்புகாரின் பெருமையைப் பேச விரும்புகின்றார் இளங்கோ அடிகள். எவ்வளவு நாட்டுப் பற்றோடு தம் சிந்தனையில் கிளர்ந்தெழும் செய்திகளை அவர் கூறுகின்றார் பாருங்கள்!

'தமிழ் வாழும் பொதியமும் தவம் விளங்கும் இமயமும் போன்ற பெருமை சான்றது பூம்புகார். பொதியமும் இமயமும் நடுங்குவதில்லை; ஒடுங்குவதில்லை; நிலை குலைவதில்லை. அத்தகையதே பூம்புகாரும். செல்வ மிகுதியும் பகையின்மையும் சேர்ந்து விளங்கலால் வேறிடம் பெயர்தலை அறியாத பழங்குடி மக்கள் வாழும் தனிப்புகழ் வாய்ந்த பூம்புகாரின்கண் ஆன்றவிந்தடங்கிய சான்றோர் பலர் உறைதலான், அம்மாநகர் நிலையானது என்று கூறு

வாரே அன்றி, அதற்கு இறுதி உண்டு என்று ஒரு போதும் கூறூர் முற்றிய கேள்வியால் முழுவதும் உணர்ந்த மூதறிஞர்.'

இளங்கோ அடிகளின் இக்கருத்தோவியம் எவ்வளவு அழகான சொல்லோவியமாய்—தம் தாய் நாட்டின் புகழ் மிக்கதொரு தலைநகரின் பால் அவர் காட்டும் அளவற்ற பத்தியினை எடுத்துக் காட்டும் இணையிலாக் கவிச் சித்திரமாய் — சிலப்பதிகாரக் காவியத்தில்-மங்கல வாழ்த்துப் பாடலில் காட்சி தருகின்றது!

'ஆங்கு,
பொதியி லாயினும், இமய மாயினும்,
பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய
பொதுவறு சிறப்பின் புகாரே யாயினும்,
நடுக்கின்றி நிலைஇய என்ப தல்லதை
ஒடுக்கங் கூறார் உயர்ந்தோர் உண்மையின்
முடித்த கேள்வி முழுதுணர்ந் தோரே!'

(மங்கலவாழ்த்து, 13–19.)

இயற்கைத் தாயின்—விண்ணரசியின்—இரு கண்களாய் விளங்கும் திங்களையும் ஞாயிற்றையும் காணும் போதும் தமிழ் வேந்தனது தனிப்புகழைப் போற்றும் உள்ளத்தோடேயே கண்டு களித்த இளங்கோ அடிகள், தமிழரசியின் வாச நறுந்திலகமாய் அமைந்த பூம்புகாரைப் போற்றும் போதும் அளவிறந்த நாட்டுப் பற்றோடு புகழ்ந்து மகிழ்தல் இயல்பே அன்றோ?

‘ அதனால்,
நாகநீள் நகரொடு நாகநா டதனொடு
போகநீள் புகழ்மன்னும் புகார்நக ரதுதன்னில் ’
(மங்கலவாழ்த்து, 20–22)

என்று பூம்புகாரைப் போற்றுகின்றார்; ‘அருஞ்செல்வம் மிக்க பூம்புகார், நாகலோகம் போலப் போகத்திலும் தேவலோகம் போலப் புகழிலும் சிறந்து விளங்குகிறது,’ என்று செப்புகின்றார்.

இலக்கியச் சுவையும் நாட்டுப்பற்றும் நிறைந்த இப்பகுதிகளையும் நூலினுள்ளே இது போன்று வரும் பிற பிற பகுதிகளையும் படிக்கும்போது, நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டிய முக்கியக் குறிப்புக்கள் இரண்டு உண்டு :

ஒன்று, இளங்கோ அடிகள் வாழ்ந்த காலம் குடி அரசு விளங்கிய காலம் அன்று; முடியரசே விளக்கம் பெற்றிருந்த காலம். எனினும், குடி மக்களையே உயிரெனப் போற்றி வாழ்ந்தனர் அந்நாளைய கோவேந்தர். ‘குடிபழி தூற்றும் கோலன்’ ஆக அஞ்சிய பேராண்மை அவர்களுடைய நல்லாண்மையாய் விளங்கியது. எனவே, அந்நாளில் வாழ்ந்த மக்களும் கவிஞரும் முனிவரும் தெய்வமுங் கூட, ‘மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்,’ எனப் போற்றி வாழ்ந்தனர். அந்நிலையில் ராஜபத்தியே தேச பத்தியாயும் விளங்கிய பான்மையினைப் பழந் தமிழ் நூல்கள் படம் பிடித்துக் காட்டுவதும்

பொருத்தமேயன்றோ? அறநெறி வழுவாது மன்பதை காக்கும் அரசர்களின் மேல் கொண்ட மாறா அன்பே—அவர்தம் ஆட்சியின் மாட்சியில் கொண்ட தீராக்காதலே—தலை சிறந்த நாட்டுப்பற்றாய் அந்நாளில் விளங்கியது.

மற்றொன்று, இளங்கோ அடிகள் தமிழக வேந்தர் மூவரும் ஒன்றுபட்டு உலகாள வேண்டும் என்ற பெருநோக்குப் படைத்த சான்றோர். எனவே, காவியப் பாகுபாட்டிற்கும் கதை அமைப்பிற்கும் ஏற்ப அவர் ஆங்காங்கே சோழனையோ, பாண்டியனையோ, சேரனையோ வாழ்த்தியிருக்கும் வாழ்த்துக்களைப் படிக்கும் போதெல்லாம் நாம் அவற்றை அற்றை நாள் 'தமிழரசுக்'கே கூறிய வாழ்த்தென்று எண்ணி மகிழ்ந்து ஏத்தலே பொருத்தமும் பயனும் உடையதாகும்.

இங்ஙனம் நாட்டுப்பற்றின் முழக்கமாய் விளங்கும் 'மங்கல வாழ்த்துப் பாட'லில் ஆரம்பிக்கும் சிலப்பதிகாரக் காவியத்தில் காண்டத்திற்குக் காண்டம், காதைக்குக் காதை, நாட்டுப் பற்று என்னும் நல்லுணர்வு தலைசிறந்து விளங்கும் நயம் மிக்க பகுதிகள் பல செறிந்து கிடக்கின்றன. இனி அவற்றின் சுவையைக் காவியத்தின் போக்கோடு—கதை அமைப்போடு—ஒட்டிச் சென்று காண்போம்.

சோழவளநாட்டின் தலைநகரில், காவிரிப் பூம்பட்டினத்தில், சிலப்பதிகாரக்காவியத்தின்

தலைவனுக்கும் தலைவிக்கும் திருமணம் நடைபெறுகிறது. திருநிறை செல்வியாகிய கண்ணகி, வான்மழை ஒத்த வண்மை பொருந்திய கொடைத்திறம் படைத்த **மாநாய்கன்** தன் குலம் வாழப் பெற்றெடுத்த பொற்கொடி. பன்னிரண்டாண்டு பிராயத்தினளாகிய அக்கண்ணகிக்கு வாய்த்த திருநிறை செல்வனோ, புகார் நகரத்து நாடாளும் வேந்தனோடு ஒருங்கு வைத்து எண்ணக்கூடிய ஒப்பற்ற பெருங்குடி மக்களின் தலைவனாய் விளங்கிய செல்வனும் அறநெறியால் ஈட்டிய பொருளை எல்லாம் வறியராய் வரும் பிறர்க்கே உரியதாக்கும் அண்ணலும் ஆகிய **மாசாத்துவான்** என்ற பெயர் படைத்த மாண்புமிக்கோன் ஈன்ற பதினாறாண்டுடைய கோவலன். 'தாமரைப்பூவில் பொருந்திய திருமகளின் புகழுடைய வடிவு இவள் வடிவை ஒக்கும்,' என்றும் 'குற்றமில்லா அருந்ததியின் கற்பு இவள் கற்பை ஒக்கும்,' என்றும் உலகின் மாதரார் அனைவரும் தன்னைத் தொழுதேத்தும் தகைமையளும் பெருங்குணத்துக் காதலாளும் ஆகியவள் கண்ணகி. மண்ணுலகம் சிறக்கும்படி வளர்ந்த பெரும்புகழுடையானும் மதிமுக மடவார் பண்ணை வென்ற தம் மொழியால் 'செவ்வேள்' என்று பாராட்டிக் காதல் கொண்டு போற்றும் கிழமையானும் ஆகியவன் கோவலன். இத்தகு நங்கையும் நம்பியும் திருமணங் கொண்டனர். செல்வமும் கருணையும் சேரப்படைத்த மாநாய்கன் குடியில் பிறந்த பொற்பும் கற்பும் பொருந்

திய கண்ணகிக்கும், பெருமையும் அருமையும் ஒருங்கே பெற்ற மாசாத்துவான் குடியில் தோன்றிய கலையும் கருணையும் மிக்க கோவல னுக்கும் நடைபெற்ற அத்திருமணத்தின் சிறப்பை இளங்கோ அடிகள் நாம் கண்ணாரக் கண்டு மகிழும் வண்ணம் உணர்ச்சி ததும்பச் சித்திரித்துக் காட்டியுள்ளார். கற்பரசி கண்ண கியையும் கலைச்செல்வன் கோவலனையும் ஈன்ற பெருமைபடைத்த 'இரு பெருங் குரவரும், ஒரு பெருநாளில்' தம் மக்கள்தம் மணவணி காண விரும்பினர். அதன் பயனாகப் பூம்புகாரில் மணமுரசு முழங்கியது. மங்கல மகளிர் யானைமீதேறி, அதன் புறக் கழுத்தில் அமர்ந்து, மணமென்னும் செய்தியை மன்பதை அறிய முரசுகொட்டி அறிவித்தனர். அந்நிலையில் முரசம் முழங்கின. மத்தளம் அதிர்ந்தன. வெண்சங்கம் ஊதின. வெண் குடைகள் வேந்தன் உலாவுக்கு எழுந்தாற் போல எழுந்தன. நகரிலே மங்கல அணி எழுந்தது!

'அவ்வழி,
முரசியம்பின முருடதிர்ந்தன
முறையெழுந்தன பணிலம்வெண்குடை
அரசெழுந்ததோர் படியெழுந்தன
அகலுள்மங்கல அணியெழுந்தது.'
(மங்கல வாழ்த்து, 45–47)

மாலை தொங்கிய வைரமணித்தூண் மண்ட பத்தில் நீலவிதானம் கட்டிய அழகிய முத்துப் பந்தலின்கீழ் மணமக்கள் அமர்ந்தார்கள்.

அப்போது சந்திரன் ரோகிணி நல்லாளைச் சேரும் நல்லோரை. அம்மங்கல முழுத்தத்தில் அருந்ததி அனைய கற்பரசியாம் கண்ணகியைக் கோவலன் மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத் தீ வலம் செய்து திருமணம் புரிந்தான். அக்காட்சியைக் 'காண்பார் கண்கள் செய்த நோன்பென்னை!' என்று எண்ணி வையகமே வியந்தது. வாசமும் மலரும் உடன் கொண்டு வந்து குழுமிய மகளிர், திருமணச் செல்வர்களை ஒசிந்து நோக்கிப் புகழ்ந்து உரைத்து மங்கலம் பாடினர். ஏந்திய இளந்தனத்தினராகிய மகளிர் கையில் சாந்து, புகை, மாலை, சுண்ணம், பாலிகை, நிறைகுடம், விளக்கு, ஆபரணம் முதலியன கொண்டு, முகிழ்த்த புன்முறுவலுடன் எங்கும் நெருங்கி நின்றனர். வாழ்வரசியராகிய அன்னார், 'மணமகள் கண்ணகி தன் காதலனை எக்காலும் பிரியாமல், கை நெகிழாமல், கூடி வாழ்க! தீதறுக! நலம் பொங்குக!' என இயம்பி வண்ணமலர் தூவி வாழ்த்தெடுத்தனர். பின்னர்க் காதலர் இருவரையும் மாதரசியர் மங்கல நல்லமளியிலே—மலர்ப் படுக்கையிலே—ஏற்றினர்.

'மாலைதாழ் சென்னி வயிரமணித் தூணத்து
நீல விதானத்து நித்திலப்பூம் பந்தர்க்கீழ்
வான்ஊர் மதியம் சகடணைய வானத்துச்
சாலி யொருமீன் தகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலம் செய்வது காண்பார்கண் நோன்பென்னை!

விரையினர் மலரினர் விளங்கு மேனியர்
உரையினர் பாட்டினர் ஒசிந்த நோக்கினர்
சாந்தினர் புகையினர் தயங்கு கோதையர்
ஏந்திள முலையினர் இடித்த சுண்ணத்தர்
விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை
முளைக்குட நிரையினர் முகிழ்த்த மூரலர்
போதொடு விரிகூந்தற் பொலன்நறுங் கொடியன்னார்,
'காதலற் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல்
தீதறு கெனஏத்திச் சின்மலர் கொடுதூவி
அங்கண் உலகின் அருந்ததி அன்னாளை
மங்கல நல்லமளி யேற்றினார்.'

(மங்கல வாழ்த்து, 48-64.)

இந்நிலையில் திருமண மக்களைப் பூம்புகார் மாதர் வாழ்த்துவதாக இளங்கோ அடிகள் பாடியுள்ள இலக்கியப்பகுதி, அறிவும் ஆண்மையும் நிறைந்த தமிழ்ப் புதல்வரை ஈன்றெடுத்து அளவிலா இன்பம் காண வேண்டிய மணமக்கள் மட்டுமே அன்றி, யாவரும் அறிந்து மகிழ்வதற்கு உரியதொன்றாய் விளங்குகின்றது.

'இமயமலைக்கு இப்பால் எம் திருமாவளவன் பொறித்த் புலிக்கொடி, அதற்கு அப்பாலாகி மேரு மலையை அளாவுக! எப்பக்கமும் போர் வெற்றி நிறைந்த எம் சினவேல் செம்பியன் உலகெல்லாம் ஒரு தனியாழி செலுத்தி விளங்குக!' என இத்தகைய வீறுடைய கருத்தமையவே,

'தங்கிய
இப்பால் இமயத் திருத்திய வாள்வேங்கை
உப்பாலைப் பொற்கோட் டுழையதா எப்பாலும்
செருமிகு சினவேற் செம்பியன்
ஒருதனி ஆழி உருட்டுவோன் எனவே.'
(மங்கல வாழ்த்து, 64-68)

என்று செந்தமிழ் நாட்டுப் பெண்டிர் புது மணம் கொண்ட மணமக்களை வாழ்த்தினர். அவ்வாழ்த்தே ஈண்டு நாம் ஆழ்ந்து கருதி இன்புற வேண்டுவது. பழந்தமிழ் மகளிர் வாழ்த்திய அவ்வாழ்த்து வாயிலாக, 'நாட்டின் உயிர் நாடி வீடே; அதுவே அறிவும் வீரமும் அன்பும் பொருந்திய அழகிய உலகை உருவாக்கும் ஒப்பற்ற நிலையம்,' என்ற பெருங்கருத்தினை எவ்வாறு தமிழ் நாட்டு மக்கள் பன்னூறு ஆண்டுகட்கு முன்பே உணர்ந்து போற்றினர்கள் என்ற உண்மை மிகத் தெளிவாக விளங்குகின்றதன்றோ ?

ஆம்! 'வீட்டின் வாழ்வும் வெற்றியுமே, நாட்டின் வாழ்வும் வெற்றியுமாம்,' என்பதே சிலப்பதிகாரம் உணர்த்தும் தலையாய தமிழ் நெறி.

# 2. இந்திர விழாவில் .........!

செல்வச் சிறப்பு வாய்ந்த தமிழ்க்குடும்பம் ஒன்றில் நடைபெற்ற திருமணத்தில் தமிழக மங்கையர் நாட்டுப்பற்று நிறைந்த நெஞ்சத்தோடு மணமக்களை வாழ்த்திய வாழ்த்தொலியைச் சென்ற அத்தியாயத்தில் கேட்டோம். இனிச் சிலப்பதிகாரக் காலத் தமிழகத்தில் நடைபெற்ற தேசியப்பெருந்திருவிழாவாகிய இந்திர விழாவில் பழந்தமிழ் வீரர் பலர் எல்லை மீறிய நாட்டுப்பற்றின் மிகுதியால் தமது இன்னுயிரையும் துரும்பென மதித்துப் புரிந்த மெய் சிலிர்ப்பிக்கும் காட்சிகளைக் காண்போம்:

பூம்புகார் நகரம் பழந்தமிழகத்தின் தலை சிறந்த பெருநகராய் விளங்கியது. காவிரியாறு கடலொடு கலக்குமிடத்தே தலை நிமிர்ந்து எழுந்து நின்ற இத்திருநகரம், 'முழங்கு கடல்

ஞாலம் முழுவதும் வரினும் வழங்கக் குறையா வளம் நிறைந்து' விளங்கியது; பட்டினப்பாக்கம் என்றும் மருவூர்ப்பாக்கம் என்றும் இரு பெரும் பிரிவுகளாய்ப் பிரிந்து, பரந்து விரிந்து கிடந்தது. பட்டினப்பாக்கத்தில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்பார் வாழும் பெருந் தெருக்களும்; ஆயுர்வேதர், நாழிகைக் கணக்கர் என்பார் வதியும் வீதிகளும்; முத்து, மணி முதலியவற்றால் மாலை தொடுப்போரும், சங்கு, பவளம் முதலியவற்றை அறுத்துக் கடைவோரும் வாழும் வீதிகளும்; சூதர், மாகதர், வேதாளிகர், நாடகக் கணிகையர் என்பார் உறையும் தெருக்களும்; பல்வகை இசைக்கருவியாளரும், வேழம்பர் முதலியோரும், தேர்ப்பாகர் யானைப்பாகர் குதிரை வீரர் படை வீரர் முதலியோரும் வதியும் தெருக்களும் இருந்தன. மருவூர்ப்பாக்கமோ, பட்டினப்பாக்கத்திற்குக் கீழ்த்திசைக்கண் விளங்கியது. கடற்கரைப் பகுதியிலமைந்த இம்மருவூர்ப்பாக்கத்தில் பழந்தமிழகத்தின் வாணிகச் சிறப்பையெல்லாம் வளமுறக் காணலாம். நகர வீதியும், அருங்கல மறுகும், கூல வீதியும், பிட்டு, அப்பம், கள், மீன், உப்பு, வெற்றிலை, நறுவிரை முதலியவற்றை விற்போர் வீதியும் இவண் உண்டு. கணக்கற்ற கைத்தொழில் பல செய்து, அவற்றாலான பொருள்களை விற்போர் வீதிகளும், கலைச்செல்வர்கள் வாழும் கவின் மிக்க வீதிகளும் பலப்பலவாய் மருவூர்ப்பாக்கத்தில் நிறைந்திருந்தன.

மருவூர்ப்பாக்கத்தின் மாண்பாய் விளங்கிய நகரவீதியில் வேயாமாடம், பண்டசாலை, மான் கட்காதலர் மாளிகை, யவனர்தம் கைத்திற மெல்லாம் காட்டி விளங்கும் பெருமனைகள் முதலியன உண்டு. இத்தகு வீதிகளில் வாசனைப் பொருள்களை விற்போர் தொகை அளவிடற்கரியதாயிருந்தது. கடல் வளமும் கலை வளமும் மிகுந்திருந்த காவிரிப்பூம்பட்டினத்தில் கடவுள் மணமும் கமழ்ந்த வண்ணம் இருந்தது. பண்டைத் தமிழ் மக்கள் போற்றி வழிபட்ட தெய்வங்கட்கெல்லாம் இந்நகரின் கண் அழகிய கோட்டங்கள் விளங்கின.

இவ்வாறு எல்லா வகையிலும் மேம்பாடுற்று விளங்கிய சோழநாட்டுத் துறைமுகப் பட்டினத்தின் இரு பெரும்பகுதிகளாகிய மருவூர்ப்பாக்கத்திற்கும் பட்டினப்பாக்கத்திற்கும் இடையே பரந்த பெரும்பொழில் விளங்கியது. அதன்கண் வானளாவ உயர்ந்த மரங்கள் செறிந்து விளங்கின. அவற்றினடியில் பந்தரிட்டு வணிகர் பலர் கடை வைத்து வாணிபம் நடத்தினர். பூம்புகார் நகரின் கீழ் மேல் பகுதிகட்கு நடுவண் இருந்த இடை நிலத்தில் அமைந்திருந்த நாளங்காடி எனப்பட்ட அப்பகற்கடைகளில், கொடுப்போரும் கொள்வோரும் விளைத்த பேரொலி, இரு பெரு வேந்தர்களின் பாசறைகட்கு இடையேயுள்ள களத்தில் எழுந்த பேரொலி முழக்கத்தைப் போன்று, கடலலை முழக்கத்தினையும் விஞ்சிக் கேட்கும். இச்செய்

தியை இளங்கோ அடிகள்,

‘கொடுப்போர் ஓதையும் கொள்வோர் ஓதையும்
நடுக்கின்றி நிலைஇய நாளங் காடி’
(இந்திரவிழவூரெடுத்த காதை, 62, 63)

என்று அழகாக வர்ணிக்கின்றார்! மேலும், இந்நாளங்காடியில் வெள்ளிடை மன்றம், இலஞ்சி மன்றம், நெடுங்கல் மன்றம், பூதசதுக்கம், பாவை மன்றம் என்னும் ஐவகை மன்றங்களும் காட்சியளித்தன.

இவையேயன்றி, நாளங்காடியில் காவற் பூதத்துப் பலிப்பீடிகை ஒன்றும், உயிர்ப்பலி வழங்கும் முழுப்பலிப்பீடிகை ஒன்றும் இருந்தன. நாளங்காடியில் நிலைபெற்றிருந்த அக்காவற்பூதம், முன்னொரு கால் வெற்றிவேல் மன்னனை முசுகுந்தனுக்கு வந்த துன்பங்களை எல்லாம் தொலைக்க இந்திரனால் அனுப்பப்பட்ட அந்நாள் தொட்டுப் பூம்புகாரைக் காத்து நின்றது. சித்திரா பௌர்ணமி அன்று மறக்குலப் பெண்டிர் பலர் அழகிய கோலம் பூண்டு வந்து அப்பூதத்தின் பலிப்பீடத்திலே மலர்களைத் தூவினர்; அவரை, எள்ளுருண்டை, நிணச்சோறு முதலியவற்றைப் படைத்தனர்; பொங்கலிட்டனர்; நறும்புகை காட்டினர்; நாணமில்லார் போல ஆவேசமுற்றுச் சிங்கியடித்துக் கைகோத்துக் குரவை ஆடினர்; வெறி கொண்ட நெஞ்சினராய், ‘எம் மன்னன் ஆளும் நிலமுற்றும், பசியும் பிணியும் பகையும் நீங்கி, மழை பொழிந்து வளம் கொழித்து வாழ்வதாக!’

என்று விண்ணதிர முழங்கினர். என்னே அவர்தம் நாட்டுப்பற்று!

முதுகுடிப் பிறந்த மறக்குடி மகளிர் செயல்கள் இவையாக, மருவூரில் வாழ்ந்த மறவலி வீரரும், பட்டினப்பாக்கத்தில் வாழ்ந்த படை வீரரும் முந்தச் சென்று முழுப்பலிப்பீடிகை முன்னே நின்றனர்; 'தெய்வமே, எங்கள் வீர மன்னனுக்கு நேரவல்ல தீங்குகள் யாவும் நீங்குமாறு செய்வாயாக!' என்று நெஞ்சுருகிப் பலிகள் தந்து பூதத்தை வணங்கி, ஆரவாரம் புரிந்தனர். வேலும் கவணும் கொண்டு போர்க்களம் புகுந்து மேலும் வென்றியே கொள்ளும் உரநெஞ்சு படைத்த அம்மாவீரர்கள், 'எங்கள் வேந்தன் என்றென்றும் வெற்றி பெறுக!' என்று எழுச்சி கொண்ட குரலால் உணர்ச்சியின் கொடுமுடியில் நின்று முழங்கினர்கள்; அக்கணமே கொள்ளி போலக் கடை சிவந்த சினம் நிறைந்த பார்வையையுடைய தங்கள் பசுந்தலையை அரிந்து பலிப்பீடத்தில் வைத்தார்கள். இடியின் குரல் போலும் வெடிபடு முழக்கத்தினையுடைய உயிர்ப்பலி கொள்ளும் புலித்தோல் போர்த்த வீரமுரசைக் கொட்டி, தெய்வத்திற்கு வான்பலி வழங்கி, 'உயிர்ப்பலி தந்தோம்! கொள்க! கொள்க!' எனக் கூவினர் அம்மறக்குல மைந்தர். என்னே அவர்தம் தேசபக்தி! அச்சந்தரும் இக்காட்சிகளை எல்லாம்,

'சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென
வெற்றிவேல் மன்னற் குற்றதை ஒழிக்கெனத்
தேவர் கோமா னேவலிற் போந்த
காவற் பூதத்துக் கடைகெழு பீடிகைப்
புழுக்கலும் நோலையும் விழுக்குடை மடையும்
பூவும் புகையும் பொங்கலுஞ் சொரிந்து
துணங்கையர் குரவையர் அணங்கெழுந் தாடிப்
'பெருநில மன்னன் இருநிலம் அடங்கலும்
பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனுஞ் சுரக்'கென வாழ்த்தி
மாதர்க் கோலத்து வலவையி னுரைக்கும்
மூதிற் பெண்டிர் ஓதையிற் பெயர,
மருவூர் மருங்கின் மறங்கொள் வீரரும்
பட்டின மருங்கிற் படைகெழு மாக்களும்
முந்தச் சென்று முழுப்பலிப் பீடிகை
'வெந்திறல் மன்னற் குற்றதை யொழிக்'கெனப்
பலிக்கொடை புரிந்தோர் வலிக்குவரம் பாகெனக்
கல்லுமிழ் கவணினர் கழிப்பிணிக் கறைத்தோற்
பல்வேற் பரப்பினர் மெய்யுறத் தீண்டி
ஆர்த்துக் களங்கொண்டோர் ஆரமர் அழுவத்துச்
சூர்த்துக்கடை சிவந்த சுடுநோக்குக் கருந்தலை
'வெற்றி வேந்தன் கொற்றங் கொள்'கென
நற்பலிப் பீடிகை நலங்கொள வைத்தாங்கு
உயிர்ப்பலி யுண்ணும் உருமுக்குரல் முழக்கத்து
மயிர்க்கண் முரசொடு வான்பலி யூட்டி'

(இந்திரவிழவூரெடுத்த காதை, 64–88)

என்று நாட்டுப்பற்றும் வீரவுணர்ச்சியும் கற்பார் நரம்புகளிலெல்லாம் ஏறி வீறு கொள்ளும் வண்ணம் இளங்கோ அடிகள் தம் நூலில் இந்

திரவிழவூரெடுத்த காதையில் அழகுற வருணித்துள்ளார்.

இவ்வருணனையை அடுத்துச் சோழ நாட்டை ஆண்ட திருமாவளவன் வடதிசை நோக்கிப் படையெடுத்த காட்சியையும், அதன் பயனாக அவன் பெற்ற மாட்சிகளையும் படிப்பவர் தமிழ் நெஞ்சம் விம்மிதம் உறப் பாடுகின்றார் இளங்கோ அடிகள்.

திருமாவளவன், செருவெங்காதலன்; போரெனில் புலி எனப் பாயும் பண்புபடைத்தவன்; அமர்புரிந்து ஒன்னாரை வென்று திசையெல்லாம் தமிழ்க்கொடி உயர்த்த உறுதி கொண்டவன். இத்தகையோன், சேரரை வென்றான்; பாண்டியரை வென்றான்; இமிழ் கடல் வரைப்பின் தமிழகம் முழுவதும் தன் ஒரு குடைக்கீழ் வைத்து அரசோச்சிப் பெருமை கொண்டான். அதன் பின் தன்னுடன் ஆண்மை கொண்டு போரிட யாரும் வாராததால், போர்த்தினவெடுத்த அவன் தோள்கள் வடதிசை நோக்கிச் சென்று மறக்கள வேள்வி புரிந்து மகிழ விரும்பின. எனவே, நன்னாளில் திருமாவளவனுடைய வாளும் குடையும் இமயம் இருக்கும் திசை நோக்கின. திருமாவளவனது மயிர்க்கண் போர் முரசம் மண்ணதிர, விண்ணதிர, வடவர் நெஞ்சதிர முழங்கியது. அவன், 'இறைவனே, இன்று நான் வடதிசை நோக்கிப் படை நடத்துகின்றேன். வடநாட்டிலேனும் என் வலிய தோள்கள் தக்க பகை

யினைப் பெறுக!' என்று வணங்கிச் சென்றான். அடலாண்மையே வடிவெடுத்த கரிகால் வளவனை அப்புண்ணியத்திசை முகத்திலும் யாரும் எதிர்க்கத் துணியவில்லை. எனவே, அவன் தமிழகப்படைகளை இமயமலைவரையில் எவ்வித எதிர்ப்புமின்றி எளிதில் நடத்திச் சென்றான்; அதற்குமேல் செல்லமுடியாது சற்றே திகைத்து நின்றான். வியப்பும் சீற்றமும் ஒருங்கே அடைந்த சினவேல் செம்பியன், 'மன்னர் எவரும் மாறு கொள்ள அஞ்சும் எனக்குப் பகை இவ்விமயமோ!' என்று வெகுண்டு உரைத்து, அம்மலையின் பிடரில் தன் வீரப் புலிக்கொடியை வீறுடன் பொறித்தான். தன்னுடன் போர் புரிய வேங்கடத்திற்கு வடக்கே எவரும் இல்லையே என்று ஏங்கித் திரும்பும் போது சோணாட்டு வேந்தனுக்குச் சோணை நதிக்கரையிலுள்ள வச்சிரநாட்டரசன் தன் முத்துப்பந்தலைத் திறையாகக் கொடுத்தான். வாட்போரில் வல்ல மகத மன்னனோ, தன் அருமையான பட்டி மண்டபத்தைத் தமிழ் நாட்டுப் பார்த்திபனின் தாளடியில் காணிக்கையாகச் சேர்ப்பித்தான். அவந்தி மன்னன் நீண்டோங்கிய தன் தோரணவாயிலைத் திருமாவளவனுக்குக் களிப்புடன் ஈந்தான். பொன்னாலும் மணியாலும் அழகுற ஆக்கப்பெற்ற இவை மூன்றும் இவற்றிற்குரிய மன்னர்தம் முன்னோர்க்குச் செய்த உதவிக்காகத் தெய்வத் தச்சனாகிய மயனால் செய்வித்துக் கொடுக்கப்

பெற்றவையாகும். பூம்புகாரின் பெருமையாய் விளங்கிய திருமாவளவனது அரண்மனையில் இம்முப்பெரும்பொருளும் அணி செய்து நின்று பெருமையுற்றன. இவ்வுண்மையைக் கூற வந்த இளங்கோ அடிகள், 'நம் நாட்டின் வேந்தன் ஒருவனது தனிப்புகழைப் பாடும் பேறு பெற்றோமே!' என்ற எக்களிப்புடன் பாடும் பகுதியைச் சிலப்பதிகாரப் புகார்க்காண்டத்தில், இந்திரவிழவூரெடுத்த காதையில் நாம் காணலாம்.

'இருநில மருங்கிற் பொருநரைப் பெறுஅச்
செருவெங் காதலின் திருமா வளவன்
வாளுங் குடையும் மயிர்க்கண் முரசும்
நாளொடு பெயர்த்து, 'நண்ணார்ப் பெறுகவிம்
மண்ணக மருங்கினென் வலிகெழு தோள்,'எனப்
புண்ணிய திசைமுகம் போகிய அந்நாள்,
'அசைவி லூக்கத்து நசைபிறக் கொழியப்
பகைவிலக் கியதிப் பயங்கெழு மலை,'என
இமையவர் உறையுஞ் சிமையப் பிடர்த்தலைக்
கொடுவரி யொற்றிக் கொள்கையிற் பெயர்வோற்கு
மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்
கோன்இறை கொடுத்த கொற்றப் பந்தரும்
மகதநன் னாட்டு வாள்வாய் வேந்தன்
பகைப்புறத்துக் கொடுத்த பட்டிமண் டபமும்
அவந்தி வேந்தன் உவந்தனன் கொடுத்த
நிவந்தோங்கு மரபின் தோரண வாயிலும்
பொன்னினும் மணியினும் புனைந்தன வாயினும்
நுண்வினைக் கம்மியர் காணா மரபின ;
துயர்நீங்கு சிறப்பினவர் தொல்லோ ருதவிக்கு
மயன்விதித்துக் கொடுத்த மரபின இவைதாம்'

(இந்திரவிழவூரெடுத்த காதை, 89-108)

சேரநாட்டுப் பெரும்புலவராகிய இளங்கோ அடிகள் சோழவேந்தன் திறத்தினை இவ்வளவு உணர்ச்சியுடன் ஓதுதற்கு அவர் உள்ளத்தில் குடிகொண்டிருந்த தமிழகப் பற்றும் நாட்டுப் பற்றுமேயன்றோ முக்கிய காரணம்!

பூம்புகாரில் இந்திரவிழாவுக்கான ஏற்பாடுகள் யாவும் விரைந்து நடைபெற்றன. தமிழ் மக்களின் பழம்பெருந்தேசியத் திருவிழா அன்றோ இந்திரவிழா? இவ்விழாவின் பெருமையை மண்ணவரேயன்றி விண்ணவரும் அறிவர். சித்திரைத் திங்களில் சித்திரைநாள் தொடங்கி இருபத்தெட்டு நாட்கள் இவ்விழா இடையறாது நடைபெறும். இந்திரன் விண்ணவர் தலைவன். அவன் தன் வச்சிரப்படையால் அரக்கரை வென்று அமரரைக் காத்தான். அதனால் அகத்திய முனிவர் ஆணைப்படி தூங்கெயில் எறிந்த தொடித்தோள் செம்பியன் காலம் முதல் வழிவழியாகச் சோழ வேந்தர் இந்திரனுக்குத் திருவிழா எடுத்து வந்தனர். 'இந்நல்விழாவால் நாடும் அரசும் நலமுறும். இப்பெருவிழாவை மறுத்தால்—மறந்தால்—மன்பதை பாழ்படும்,' என்று மக்களும் மன்னரும் நம்பினார்கள். பூம்புகாரில் எவரும் போற்ற விளங்கிய ஐவகை மன்றங்கள் இருந்ததை நாம் அறிவோம். அவற்றில் அரும்பலியிட்டு இந்திர விழா ஆரம்பமாகும். இந்திரன் கோவிலில் காப்புக் கட்டி, வச்சிரக் கோட்டத்திலுள்ள மங்கல முரசைக் கச்சை யானையின் பிடர்த்

தலையில் ஏற்றி, வெண்ணிற ஐராவதம் இருக்கும் ஆலயத்தில் இந்திரவிழாவின் முதலும் முடிவும் அறிவிப்பர். நிலைபெற்ற கற்பகத் தருவின் தோட்டத்திலுள்ள மங்கல நெடுங் கொடியை வானுறப் பறக்கவிடுவர். இவ்வாறு முரசறைந்து கொடியேற்றம் செய்து ஆரம்பமாகும் இந்திரவிழாவைப் பற்றிய செய்திகளை எல்லாம் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் விரிவாகப் பேசுகின்றன. மக்களின் மனவளர்ச்சிக்கும், கலை வளர்ச்சிக்கும், அறிவு வளர்ச்சிக்கும், சமூக ஒற்றுமைக்கும் பெருந்துணை புரிந்த இவ்விந்திர விழாவின்போது காவிரிப்பூம்பட்டினத்து வீதிகளெல்லாம் பலவகையாலும் அலங்கரிக்கப்பெற்று, அழகுற்றுத் திகழ்ந்தன. நகரின் வீதிகளில் பசும்பொன்னுல் செய்த பூரண கும்பங்களும், பாலிகைகளும், பாவை விளக்குகளும், பசும்பொற்கொடிகளும், தூய மயிற்பீலிகளும், அழகிய சுண்ணப் பொருள்களும் அணி அணியாய்ச் செறிந்தன. அரசனுடைய ஐம்பெருங்குழுவும், எண்பேராயமும், அரச குமரரும், பரத குமரரும், குதிரை வீரரும், யானை வீரரும், தேர் வீரரும் ஒருங்கு திரண்டனர். இவ்வாறு திரண்டவர், தம் நாட்டு அரசன் மேம்பாடடைய வேண்டிப் 'புகழ்பெற்ற எங்கள் வேந்தன் கொற்றம் கொள்வானாக!' என வாழ்த்தினர். ஆயிரத்து எட்டுக் கலசங்களில் தண்ணறுங்காவிரியின் புண்ணிய நன்னீர் கொண்டு மண்ணகம் மருள வானகம்

வியப்ப விண்ணவர் தலைவனை விழுநீர் ஆட்டினர். இந்திரன் கோயிலில் மட்டுமன்றி, ஏனைய கோயில்களிலும் விழாமுழக்கம் மிக்கது. சோழ நாட்டு வேந்தன் அருள் சுரந்து தன் பகைவரை எல்லாம் சிறையினின்றும் விடுதலை செய்தான். பண்ணும் பாடலும் எண்டிசையும் முழங்கின. மாந்தர் அனைவரும் ஒரு குடும்பத்துத் தோன்றினவர் போல, உறவுணர்ச்சி குலையாது, நாட்டின் தலையாய விழாவில் பங்கு கொண்டனர். சிறு தெருக்களும் பெரிய வீதிகளும் திருவிழாக் களிப்பில் மூழ்கிக் கிடந்தன. சுருங்கச் சொன்னல், இந்திரப் பெருவிழாவின் சிறப்புக்கள் யாவும் பூம்புகார் நகரத்தின்—அந்நகர மக்களின் வாழ்க்கையின்—ஒவ்வொரு பகுதியிலும் காட்சி அளித்தது என்னலாம்.

# 3. மாதவி நெஞ்சம்  

இந்திரவிழா இருபத்தெட்டு நாட்களும் சிறப்புற நடைபெற்று முடிவடைந்தது. விழா முடிந்த மறுநாள், ஏற்றிய கொடியை இறக்கினர். அன்று உவா நாள் வந்துற்றது. மாந்தர் அனைவரும் விடியற்காலையிலேயே கடல் நோக்கிச் சென்று நீராடி, கடற்கரைச் சோலையிலே தங்கி, இன்புற முந்தினர். அவ்வமயம் கடற்கரையிலே நடைபெறும் இன்பக்களியாடல்களைக் காண மாதவி மங்கையும் பெரு விருப்புற்றுக் கோவலனுடன் புறப்பட்டாள்.

இந்திரவிழாவின்போது மாதவி ஆடினள்; 'நிலையும் படிதமும் நீங்கா மரபில் பதினோராடலும் பாட்டின் பகுதியும் விதிமாண் கொள்கையின் விளங்க' மாதவி ஆடினள். எவர் கண்ணுக்கும் புலப்படா வகையில் மறைந்து வந்திருந்து இந்திரவிழாவைக் காணும் இமையவர் இதயமும் ஆட, மாதவி ஆடினள்; பாடினள்.

இறுதியில் கலையரசி மாதவியின் ஆடலும் பாட லும் ஒருவாறு முடிவு நிலைக்கு வந்தன. அவ ளோடு ஊடல் கொண்டிருந்தான் கோவலன். எனவே, அவன் உள்ளம் உவப்பத் தன்னைப் பல்வகையாலும் அலங்கரித்துக்கொண்டாள் மாதவி. அவ்வலங்கார வருணனையை முப்பத்து மூன்று அடிகளில் விரிவாகப் பேசுகிறார் இளங்கோ அடிகள்.[1]

இயற்கை நலனும் செயற்கைத் திறனும் கலந்து விளங்கத் தன்னை அலங்கரித்துக் கொண்ட மாமலர் நெடுங்கண்ணளாகிய மாதவி, கடல் விளையாட்டுக்காண விரும்பித் தன் காதற் கணவனுடன் புறப்பட்டாள். கோவலன் அத் திரி[2] மேல் ஏறினன். மான் விழி மாதவியோ, குதிரை பூட்டிய தேரில் ஏறினள். இருவரும் கடற்கரை நோக்கி விரைந்தனர். அவ்வமயம் கதிரவன் உதயமாகிக்கொண்டிருந்தான். பொய்கைத் தாமரையில் கண்ணுறங்கிய பறவைஇனம், காலைக் கதிரொளி கண்டு துயில் நீங்கி எழுந்து, தமிழிசை பாடியது; கோழி கூவி யது; காலை வெண்சங்கு முழங்கியது; வெள்ளி விண் மீன் நள்ளிருள் போக்கியது. அந்நேரத் தில் புறப்பட்ட காதலர் இருவரும் பட்டினப் பாக்கம் மருவூர்ப்பாக்கம் என்ற இருபெரும் பகுதிகளின் எல்லை காண ஒண்ணு வளங்களை எல்லாம் கண்டுகொண்டே கடற்கரை நோக்கிச்

1. கடலாடு காதை. 76–108.
2. அத்திரி—கோவேறு கழுதை.

சென்றனர். அங்கே அரசிளங்குமரரும், அவர்தம் அடிமைத் திரளும், பரத குமரரும், அவர்தம் பல்வகையான ஆய மகளிரும், ஆடும் பெண்டிரும், பாடும் மகளிரும் கூடியிருந்தனர். அப்பொழுது அங்கு விளங்கிய வியத்தற்குரிய காட்சிகளையும், முழங்கிய பல்வேறு ஓசைகளின் பெருக்கையும் எண்ணிப் பார்க்கின்றார் இளங்கோ அடிகள். தம் தமிழக வேந்தனது தனிப்புகழ் அவர் நினைவிற்கு வருகிறது. அழகியதோர் உவமை கூறித் தம் உள்ளக் கருத்தைப் புலப்படுத்துகின்றார். கடற்கரையில் கோவலனும் மாதவியும் சென்ற பொழுது இருந்த பேராரவாரமும் பல்வேறு காட்சிகளும் 'விண்ணிலேறியும் போர் புரியும் பெரும்புகழுடைய கரிகால் வளவன்' புதுப்புனலாடும் திருநாளின் காட்சியை ஒத்திருந்தன என்று கூறுகின்றார்.[3]

கடலாட வந்திருந்த கடலனைய மக்களின் கூட்டத்தைக் கண்டு களித்துக்கொண்டே மாதவி 'ஆங்கோர் புன்னை நீழல் புதுமணற் பரப்பில் ஓவியத்திறனமைந்த விதானம் விரித்த வெண்கால் அமளிமிசைக்' கோவலன் தன்னொடும் கொள்கைப்படி கூடியிருந்தாள்.

3. 'விண்பொரு பெரும்புகழ்க் கரிகால் வளவன்
தண்பதம் கொள்ளுந் தலைநாட் போல
வேறுவேறு கோலத்து வேறுவேறு கம்பலை
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி'
(கடலாடு காதை, 159-162)

அப்போது மணமகள் போல அழகுற விளங்கிய மாதவி, தன் அருமைத் தோழி வயந்தமாலை ஏந்தி நின்ற யாழைத் தொழுது வாங்கினாள். அதில் இசை அமைத்துப் 'பாணி யாது?' எனக் கூறிக் கோவலன் கையில் நீட்டினாள். அவன் அதை வாங்கி, அகப்பொருட்சுவை அமைந்த ஆற்றுப்பாட்டும் கடற்கரைப் பாட்டும் பலவாகப் பாடலானான். அவற்றைக் கேட்ட மாதவி மனம் திரிந்தது; 'யாழிசை மேல் வைத்து ஊழ்வினை வந்து உறுத்தது.' ஆகலின், கோவலன் பாடிய கானல் வரிப் பாடல்களைக் கேட்ட மான் நெடுங்கண் மாதவி, 'மன்னுமோர் குறிப்புண்டு: இவன் தன் நிலை மயங்கினான்,' எனக் கருதிக் 'கலவியான் மகிழ்ந்தாள் போல் புலவியால் யாழ்வாங்கி'ப் பாடத் தொடங்கினாள்.

இவ்வாறு ஊழ்வினை உறுத்த யாழிசைத்துக் கோவலனும் மாதவியும் பாடிய பாடல்களை இளங்கோ அடிகள் தம் காவியத்தில் அழகுற அமைத்துள்ளார். காதற்சுவையும் கற்பனைச் சுவையும் மலிந்த அப்பாடல்களில் நாடாளும் காவலனான சோழவேந்தன் புகழே—அவன்பால் காதல் உலகமும் கலையுலகமும் கற்பனை உலகமும் கொண்டிருந்த பற்றே—எதிரொலி செய்வதைக் கேட்கலாம்.

'காவிரி நாடன்-கரிகால் வளவன்-கங்கை நாட்டைத் தன் செங்கோல் ஓச்சிப் புணர்ந்தான்; அதனால், 'எனக்குரிய கணவன் கங்கையைப் புணர்வதா!' என்று காவிரி பிணங்க

வில்லை. காரணம், மங்கையர்தம் பெருங்கற்பின் திறம் அதுவாகும்! அவ்வாறே ஆத்தி சூடிய வெண்குடையானாகிய சோழன், தன் வளையாச் செங்கோல் ஓச்சிக் கன்னியை-கன்னியா குமரித் துறையைப்—புணர்ந்தான். அப்போதும் காவிரி, 'என் நாயகன் பிறள் ஒரு கன்னியைப் புணர்வதா!' என்று பிணங்கவில்லை. காரணம், மனவுறுதி படைத்த மாதர் கற்பின் திறன் அது.'

இக்கருத்துக்கள் அமையக் கோவலன் பாடிய பாடல்கள் இவை:

'திங்கள் மாலை வெண்குடையான்
சென்னி செங்கோ லதுவோச்சிக்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவாய் வாழி காவேரி!
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவா தொழிதல் கயற்கண்ணாய்!
மங்கை மாதர் பெருங்கற்பென்
றறிந்தேன் வாழி காவேரி!

'மன்னு மாலை வெண்குடையான்
வளையாச் செங்கோ லதுவோச்சிக்
கன்னி தன்னைப் புணர்ந்தாலும்
புலவாய் வாழி காவேரி!
கன்னி தன்னைப் புணர்ந்தாலும்
புலவா தொழிதல் கயற்கண்ணாய்!
மன்னு மாதர் பெருங்கற்பென்
றறிந்தேன் வாழி காவேரி!'

இப்பாடலைக் கேட்ட மாதவி மனத்தில் ஏதோ ஒன்று சுறுக்கென்று தைத்தது.

தானும் ஒரு குறிப்பினள் போலப் பாடத் தொடங்கினாள்; விளைந்தது வினை! அவள் பாடிய பாடல்கள் இவை:

'மருங்கு வண்டு சிறந்தார்ப்ப
மணிப்பூ ஆடை அதுபோர்த்துக்
கருங்க யற்கண் விழித்தொல்கி
நடந்தாய் வாழி காவேரி!
கருங்க யற்கண் விழித்தொல்கி
நடந்த வெல்லாம் நின்கணவன்
திருந்து செங்கோல் வளையாமை
அறிந்தேன் வாழி காவேரி!

'பூவர் சோலை மயிலாலப்
புரிந்து குயில்கள் இசைபாடக்
காமர் மாலை அருகசைய
நடந்தாய் வாழி காவேரி!
காமர் மாலை அருகசைய
நடந்த வெல்லாம் நின்கணவன்
நாம வேலின் திறங்கண்டே
அறிந்தேன் வாழி காவேரி!'

(கானல் வரி, 25, 26)

'காவிரியே, வண்டொலிக்க மணிப்பூஞ் சேலையணிந்து, மீன் விழி காட்டிப் பெண்மையால் ஒதுங்கி நீ நடக்கின்றாய். காரணம், நின் கணவர் திருந்து செங்கோல் கோடாமைதான். காவிரியே, பூஞ்சோலைகளில் மயில்கள் ஆட, குயில்கள் இசை பாட, அழகான மாலைகள் அசைய, நீ நடந்தாய். காரணம், பகைவரை வென்று புகழ் பெற்ற நின் கணவர் வேலின்

திறந்தான்!'

இவையே உள்ளத்தில் மாறுபாடு கொண்டு மாதவி பாடிய முதலிரு பாடல்களின் கருத்துக் கள்.

மாதவி பாடிய பாடல்களால் விளைந்த விளைவைக் கூறவும் வேண்டுமோ! இந்திர விழா முடிந்ததுமே கண்ணகியின் இடக் கண்ணும் மாதவியின் வலக்கண்ணும் துடித்த தன் காரணம் இப்போது தெளிவாகிவிட்டது! மாதவிபால் 'விடுதல் அறியா விருப்புக்' கொண்டு 'வடுநீங்கு' சிறப்புடைய தன் மனையை யும் மறந்து வாழ்ந்த கோவலன் மனம் பிறை மோர் பட்ட பாலாயிற்று.

'கானல்வரி யான்பாடத் தாஒன்றின்மேல் மனம்வைத்து
மாயப்பொய் பலகூட்டு மாயத்தாள் பாடினாள்!'

என்று மாதவியைப் பற்றி முடிவு செய்தான் கோவலன். உடனே முழுமதி போன்ற முகத் தாளாகிய மாதவியை அவன் அணைத்திருந்த கை தானே நெகிழ்ந்தது. 'பொழுது போயிற்று; போவோம்,' என்று கூறி, மாதவி யுடன் எழாமல், ஏவலாளர் சூழத் தான் மட்டும் மாதவியை அலை மோதும் கடற்கரையிலேயே தன்னந்தனியளாய் விட்டுவிட்டு 'வேகநடை' நடந்து சென்றுவிட்டான் கோவலன்.

கலையுணர்ச்சியின் கூர்மையால்—உண்மை வேட்ட போட்டி உள்ளத்தின் விளைவால்— துயரக் கடலில் வீழ்ந்த மாதவி, தாதவிழ் பூஞ்

சோலையில் தனது பாட்டொலி நிறுத்தித் தனி ஒருத்தியாய் வண்டியில் ஏறி, 'காதலனுடனன்றியே' தன் மனை புகுந்தாள். இவ்வாறு காரிருள் உலகைக் கவியும் நேரத்தில் தன் அகவுலகையும் துன்ப இருள் கவ்வ வீடு சேர்ந்த மாதவியின் இரங்கத்தக்க நிலையை எடுத்துரைக்கும் இளங்கோ அடிகள், 'கானல் வரிப்' பகுதியில் இறுதியாகக் கூறியுள்ள ஒரு செய்தி சிலப்பதிகாரக் காலத்தில் வாழ்ந்த செந்தமிழ் நாட்டு மக்களின்—மாதரின்—நெஞ்சில் நிறைந்திருந்த நாட்டுப்பற்று என்ற நல்லுணர்வு எவ்வளவு உரம் வாய்ந்து திகழ்ந்தது என்பதை உலகுக்கு அறிவிக்கும் ஒப்பற்ற தன்மை பெற்று விளங்குகிறது. அன்றேல், 'இடியுண்ட மயில்' போலத் துயருண்ட மாதவி, விளையாத துயரம் விளைந்து வீடு சேர்ந்த நேரத்திலும், தன் துயரை மறந்து —நாட்டின் வேந்தனை நினைந்து—காவிரிநாடனைப் போற்றி, 'உலகிலுள்ள அரசர்களை எல்லாம் தலை வணங்கச் செய்யும் முகபடாம் அணிந்த யானையையும் சுடர்வாளையும் உடைய எங்கள் சோழ வேந்தனின் மாலையணிந்த வெண்கொற்றக்குடை பெரிய சக்கரவாள கிரியை உள்ளகப்படும்படி கவித்து நீடு வாழ்க!' என்னும் கருத்தமைய,

> 'மாயிரு ஞாலத் தரசுதலை வணக்குஞ்
> சூழி யானைச் சுடர்வாட் செம்பியன்
> மாலை வெண்குடை கவிப்ப
> ஆழி மால்வரை அகவையா வெனவே.' (கானல் வரி, 52.)

என்று வாழ்த்துவளோ?

தாம் நலிவுறினும் தம் நாட்டின்—நாட்டு வேந்தன்றன்—நல்லாட்சி நலிவுறலாகாது என்று தேச பத்தி நிறைந்த பழந்தமிழ் நாட்டு மக்கள் கருதினார்கள். அதற்கோர் எடுத்துக் காட்டாய் விளங்கிய அழகரசி — ஆடலரசி — அருங்கலை அரசி-மாதவி-தன் மனம் உடைந்த நேரத்திலும் உடையாத நாட்டுப் பற்றுடைய வளாய்த் திகழ்ந்த உண்மையைக் காட்டும்—உள் ளத்தைக் கொள்ளை கொள்ளும்—இக்காட்சி யோடு முடிகிறது புகார்க் காண்டத்தின் உயிர்நிலைப் பகுதியாகிய கானல் வரி.

# 4. வேதியன் வாழ்த்தும் வேட்டுவர் வாழ்க்கையும் 

கதிரொளி மறைந்த மாலைப்பொழுதில் காரிருள் எங்கும் சூழ்ந்தது. கலையரசி மாதவி பால் கோவலன் கொண்டிருந்த உறவும் முறிந்துவிட்டது. கற்பரசி கண்ணகியின் இல்லம் தேடி அவன் கால்கள் விரைந்தன. காற்றெனக் கடுகிச் சென்ற அவன், நேரே தன் பைந்தொடி 'புனையா ஓவிய'மாய்க் கிடந்த படுக்கையிடம் சேர்ந்தான்; அவள் 'வாடிய மேனி வருத்தம்' கண்டான்; நெஞ்சு புண்ணுனான்; 'வஞ்சமும்பொய்யுமே வடிவெடுத்த மாயக்காரியோடு உறவு கொண்டேன்! நம் குலத்தார் தேடித்தந்த மலைபோலும் பொருட்குவையெல்லாம் பாழாயிற்று! வறுமையுற்றேன்! வெட்கம் தருவது என்னிலை!' என்று மனம் குமுறிப் பேசினான். தவக்கொழுந்தாகிய கண்ணகி அது

கேட்டுக் குறுநகை புரிந்து, 'இரண்டு சிலம்பு கள் இன்னும் இருக்கின்றன; கொள்ளுங்கள்,' என்றாள் கரவறியாக் காதல் நெஞ்சத்தோடு— அன்று—அருளுள்ளத்தோடு. கண்ணகியின் வஞ்சமற்ற மொழிகள் கோவலன் உள்ளத்தை என்னவெல்லாம் செய்தனவோ! அவன் நாணும் படி அமைந்த நன்னயம் செறிந்த அம்மொழி கள், கோவலன் உள்ளத்தில் இத்தனை நாளும் கலையுணர்வு என்ற தண்ணீரால் அவிந்து கிடந்த கடமை உணர்வைத் தட்டி எழுப்பின. அவன் கண்ணகியைப் பார்த்து, 'சேயிழையே, நீ கூறிய இவ்விரு சிலம்புகளையே முதலாகக் கொண்டு வாணிகம் புரிந்து தொலைந்த பொருளை எல்லாம் மீண்டும் திரட்டுவேன். அதன்பொருட்டு மாடங்கள் நிறைந்த மதுரைக் குப் போகத் துணிந்தேன். கோதாய், உடன் எழுக!' என்று கூறினன்.

கண்ணகிக்குப் 'புறப்படு' என்று கோவ லன் கட்டளை இட்டான். ஆனால், அவனுக்கோ, அவன் தீவினையே கட்டளையிட்டது. இருள் தொலைவதற்கு முன் காதலர் இருவரும் பூம் புகாரை விட்டு நீங்கினர்.

மதுரை நோக்கிச் சென்ற காதலருக்குக் கவுந்தி அடிகள் துணை கிடைத்தது. மூவரும் நாள் தோறும் 'காவதமல்லது கடவாராகி', மெல்ல மெல்ல நடந்து சென்று, இறுதியில் உறையூரை அடைந்தனர்; அங்கிருந்து ஒருநாள் வைகறைப்

பொழுதில் புறப்பட்டுத் தென்திசை நோக்கிச் செல்லத் தொடங்கினர்; செல்லும் வழியில் ஒரு பூங்காவினுள் புகுந்தனர். அங்கு யாரோ ஒரு முதியோன்–மறையோன்–பாண்டியன் புகழை மனமாரப் பாடி மகிழும் குரல் கேட்டனர். பாண்டி நாட்டை நோக்கி ஆர்வத்துடன் சென்றுகொண்டிருந்த கோவலனது உள்ளம் அக்குரலில் மிகவும் ஈடுபட்டது. கோவலன் செவியையும் சிந்தனையையும் கவர்ந்த அக்குரல், 'எங்கள் கோமானாகிய மன்னவர் பெருந்தகை ஊழி ஊழி உலகங்காத்து நீடூழி வாழ்க! தேவர் கோனாகிய இந்திரன் பொறாமை கொண்டு மதுரையை அழிக்கக் கடலை ஏவினான். அது கண்ட உக்கிர பாண்டியன் கூர்வேல் எறிந்து கடலைத் தன் கால் மட்டத்திற்கு வற்ற வைத்து அடக்கினான். அந்தப் பழம்பகையைப் பொறாமல் கொடுமை நிறைந்த கடல் குமுறி எழுந்து பஃறுளியாற்றோடு பன்மலைகளையுடைய குமரிக் கோட்டையும் விழுங்கியது. அதனால், வடதிசையிலுள்ள கங்கையாற்றினையும் இமய மலையினையும் தன்னுடையன ஆக்கிக்கொண்ட தென்னவன் வாழ்க! இந்திரன் சூட்டிய மாலையை மார்பிலேந்திய பாண்டியன் வாழ்க! 'எம் முதல்வனாகிய அமரர் கோனின் உச்சிப் பொன்முடி வளையை உடைத்தவன் இப்பாண்டியன்; எனவே, யாம் மழை பொழியோம்!' எனச் சென்ற மழையைத் தன் ஆற்றலால் பிணித்து உலகெலாம் பெருவளம் சுரக்க ஆண்ட மன்ன

வன்—வழுதி—வாழ்க!' இவ்வாறு உளங்கனிந்து பாடியது அக்குரல். அக்குரல் வழி வந்த கருத்துக்களை அமிழ்தினும் இனிய தமிழ்ச் சொற்களாற்பாடியுள்ள இளங்கோ அடிகளின் வாக்கில் செந்தமிழ்ச் சுவையும் நாட்டுப் பற்றும் செறிந்து விளங்குகின்றன.

'வாழ்க எங்கோ மன்னவர் பெருந்தகை
ஊழிதொ றூழிதொ றுலகங் காக்க !
அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி
வடிவேல் எறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி !
திங்கட் செல்வன் திருக்குலம் விளங்கச்
செங்கணு யிரத்தோன் திறல்விளங் காரம்
பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி !
முடிவளை யுடைத்தோன் முதல்வன் சென்னியென்று
இடியுடைப் பெருமழை யெய்தா தேகப்
பிழையா விளையுட் பெருவளஞ் சுரப்ப
மழைபிணித் தாண்ட மன்னவன் வாழ்க!'

(காடுகாண் காதை, 15-30.)

இவ்வாறு தீதில்லாச் சிறப்புடைத் தென்னவனை வாழ்த்திய அம்மறையோன் யார் என அறியக் கோவலன் உள்ளம் அவாவியது. ஆதலின், அவன் பாண்டியன் புகழ் பரவிய மறையவனை அணுகினன்; 'யாது நும்மூர்? ஈங்குவரக் காரணம் யாது?' என வினவினன். அதற்கு அம்மாமுது மறையோன், 'காவிரிக் கரையில்—

திருவரங்கத்தில்—பலர் தொழுதேத்த நெடிய பொற்குன்றத்தில் நீலமேகம் படர்ந்ததுபோல ஆயிரந்தலையுடைய ஆதிசேடன்மேல் திருவளர் மார்பனுய்ப் பெருமான் பள்ளி கொண்டிருக்கும் கோலத்தையும், பொங்கருவி பாயும் வேங்கட மலையுச்சியில் வில் பூண்ட கார்மேகம் போல நின்று கடவுள் காட்சி தரும் கோலத்தையும் 'காட்டு, காட்டு' என்று என் கண்கள் என் மனத்தைத் தூண்டியதால், யாத்திரையாக இங்கே நான் வந்தேன்; வழியில் பாண்டி நாட்டின் சிறப்பும் அறச்செய்கையும் கண் குளிரக் கண்டேன்; அதனல், பாண்டிய மன்னனை வாயார வாழ்த்தி இங்கிருக்கிறேன். என் வரவிற்குக் காரணம் இதுவே. நான் குடகமலைப் பக்கத்திலுள்ள மாங்காடு என்னும் ஊரில் உள்ளேன்,' என்று பதிலுரைத்தான்.

'தீதுதீர் சிறப்பின் தென்னனை வாழ்த்தி
மாமுது மறையோன் வந்திருந் தோனை
'யாது நும்மூர்? ஈங்கென் வரவு?'எனக்
கோவலன் கேட்பக் குன்றுச் சிறப்பின்
மாமறை யாளன் வருபொருள் உரைப்போன்,
'நீல மேக நெடும்பொற் குன்றத்துப்
பால்விரிந் தகலாது படிந்தது போல
ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறல்
பாயற் பள்ளிப் பலர்தொழு தேத்த
விரிதிரைக் காவிரி வியன்பெருந் துருத்தித்
திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்,
வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை

விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
இருமருங் கோங்கிய இடைநிலைத் தானத்து
மின்னுக்கோடி உடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி
நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு
பொலம்பூ ஆடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்
என்கண் காட்டென் றென்னுளம் கவற்ற
வந்தேன்; குடமலை மாங்காட் டுள்ளேன்;
தென்னவன் நாட்டுச் சிறப்பும் செய்கையும்
கண்மணி குளிர்ப்பக் கண்டேன்; ஆதலின்
வாழ்த்திவந் திருந்தேன்; இதுவென் வரவு,'எனத்
தீத்திறம் புரிந்தோன் செப்பக் கேட்டு'

(காடுகாண் காதை, 30-57)

மறையோன் உரைத்த பதிலில்—அதை அழகிய தமிழில் பாடியுள்ள இளங்கோ அடிகளின் வாக்கில்—எத்துணை ஆழ்ந்த நாட்டுப் பற்றுணர்ச்சி புலனாகின்றது! கடவுள் பத்தியில் கனிந்த மறையோனைச் சிறந்த ராஜ பத்தியும் தேசபத்தியும் கொண்டவனாக இளங்கோ அடிகள் காட்டும் காட்சி ஓர் இன்பக் காட்சி அன்றோ? அண்ட சராசரங்களை எல்லாம் அடக்கி ஆளும் ஆண்டவனையும், தம் தாய் நாட்டில் செங்கோல் செலுத்தித் தான் உறங்கும் போதும் ஒளி குன்றாது ஆளும் மன்னனையும் 'இறை' என்னும் சொல்லாலேயே போற்றிய பண்பாடு நம் பழந்தமிழ்ப் பண்பாடன்றோ?

ஆற்றிடையே பள்ளி கொண்ட கிடந்த வண்ணத்தானுகிய திரு அமர் மார்பனும், மலை யுச்சியில் கோயில் கொண்ட நின்ற வண்ணத் தானுகிய நெடுமாலும் ஆகிய அருள் சான்ற தெய்வங்களை—அவர் உறையும் தமிழ் நாட்டுத் திருப்பதிகளைக்—காணக் குடமலை மாங்காட்டு அந்தணன் உள்ளம் துடித்ததாமே! தென்னவன் நாட்டுச் சிறப்பும் செய்கையும் கண்டு அவன் 'கண் மணிகள்' குளிர்ந்தனவாமே! எல்லாவற்றிற்கும் மேலாகப் 'பஃறுளியாற்றுடன் பன்மலை அடுக்கத்தையும்' அழித்துக் கொள்ளை கொண்ட கடலைக் 'கொடுங்கடல்' என்று எவ்வளவு ஆத்திரத்தோடு குறிப்பிடுகிருன் அம்மாங்காட்டு மறையோன்! 'தீத்திறம் புரிந்தோனு'கிய அவனுக்கே பழந்தமிழ் நாட்டின் தென்பகுதியைக் கொள்ளை கொண்ட இயற்கையின்மீது—அலை மோதும் கடல்மீது—அவ்வளவு ஆத்திரம்—சீற்றம்—இருக்குமானல், இளங்கோ அடிகளைப் போன்ற நாட்டுப்பற்றே வடிவெடுத்த நற்றமிழ்ச் சான்ருேர் உள்ளத்து உறைந்திருந்த நாட்டுப் பற்ரும் நல்லுணர்ச்சியைப்பற்றிக் கூறவும் வேண்டுமா!

'பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள'

என்று கூறும் மாங்காட்டு மாமறையோன் சொற்களைப் படிக்கும் போது, தமிழ் நாட்டின் எல்லை குறுகுவதை—நிலப்பரப்பு அழிவதை—ஒரு சிறிதும் பொறுக்க இசையாத நாட்டுப்பற்

றுணர்ச்சியன்றோ நம் உள்ளத்தில் பொங்குகிறது! கதையின்—சுவை நிறைந்த காவியத்தின்—விறுவிறுப்பான ஒரு கட்டத்தில் புத்தம் புதிய மனிதனாக ஒருவனைத் தோற்றுவித்து, வேதம் ஓதும் அவன் வாயால் பாண்டியன் புகழ் போற்றச்செய்து, அதோடும் அமையாது, தமிழகத்தின் மண்ணும் பாழாகப் பொறுக்காத உணர்ச்சியோடு—தாய் நாட்டின்—பழந் தமிழ் நாட்டின்—எல்லையைப் பறித்த இத் தென்கடல் கொடுங்கடலே என நெஞ்சு குமுறப் பேச வைத்துத் தம் காவியத்தில் வரும் சிறு பாத்திரம் ஒன்றாலும் கற்பார் நெஞ்சில் நாட்டுப்பற்று கொழுந்து விட்டு எரியச் செய்யும் இளங்கோ அடிகளின் மேதையைப் போற்றுவோமா, அன்றி அவர் உள்ளத்தில் நிறைந்து கிடந்த நாட்டுப்பற்றும் பெருஞ்சக்தியை வாழ்த்தி வணங்குவோமா?

* * *

பூம்பொழிலில் சந்தித்த அனலோம்பும் அந்தணன் வாயிலாக மதுரைக்குச் செல்லும் முப்பெரு வழிகளைப் பற்றியும் கோவலன் கேட்டுத் தெரிந்துகொண்டான். பின்னர் மாதவத்தாட்டியாகிய கவுந்தி அடிகளுடன் சேர்ந்து கோவலனும் கண்ணகியும் மதுரை மூதூர் நோக்கி நடக்கலாயினர். நெடுவழி நடந்த களைப்பால் கவுந்தியும் கருந்தடங் கண்ணியாகிய கண்ணகியும் பாதையில் ஒரு புறம் தங்கினர். கோடை வெயிலால் துன்

புற்றிருந்த கண்ணகிக்குச் செல்வச் சீமான் குடியிற்பிறந்த கோவலன் தாமரை இலையில் பொய்கை நீர் கொணர்ந்து கொடுத்துத் தாகம் தீர்த்தான். பொறுக்கமுடியாத வெயில் கொளுத்தியது. கண்ணகி நல்லாள் மெய் சோர்ந்து பாதம் கொப்புளிக்கத் துயருற்றாள். 'இனி இக்கொடிய பாலை வழியே செல்ல முடியாது!' என்று எண்ணிக் கோவலனோடு கொடுங்குழையைக் காதில் அணிந்த மாதாகிய கண்ணகியும் கவுந்தி அடிகளும் மயக்கம் நிறைந்த மாலை வழியில் குராவும் வெண்கடம்பும் கோங்கும் வேங்கையும் செறிந்து மலர்ந்து விளங்கிய சோலை சூழ்ந்த ஓர் இருப்பிடத்தை அடைந்தனர். தீமைக்கு நடுவேயும் சிறு நன்மை இருப்பது போலப் பாலை வனத்தின் நடுவே ஒரு சோலை வனமாய் விளங்கிய அவ்விடத்தில் குற்றமற்ற சிறப்பினையுடைய ஐயை கோட்டம்—கொற்றவையின் கோவில்—அமைந்திருந்தது. ஆம்! பாலை நிலமக்களின் நெஞ்சம் கவர்ந்த தெய்வமல்லளா அவள்? பாலை நில மக்கள் இரக்கம் என்பது ஒரு சிறிதும் உள்ளத்தில் இல்லாத மறவர்கள். மழை வளத்தை எந்நாளும் அவர்கள் எதிர் பார்ப்பது இல்லை. வலிமை பொருந்திய கரத்தில் ஏந்திய வில்லின் துணையால் அரிய வழிகளில் செல்வாரைப் பதைபதைக்க வைத்துக் கொள்ளை கொள்ளும் பொருளே அவர்கள் வாழ்க்கையை வளப்படுத்தும் பெருஞ்செல்வ

மாகும். கூற்றுவனை ஒத்த வலியுடனே வளைந்த வில்லைக் கையிலேந்திப் பகைவர் நாடு நோக்கிப் பாய்ந்து செல்லும் தொழிலே வாழ்க்கையாக உடைய அவர்கள் வேண்டும் வெற்றிகளை எல்லாம் விரைந்து விரும்பிக் கொடுப்பாள் அவர் தம் குலத்தெய்வமாகிய கொற்றவை. வீர மறவர்கட்கு அவள் தரும் வெற்றிப் பரிசுகட்கு எல்லாம் மாருக அவள் எதிர் பார்ப்பது எல்லாம் ஆண்மைத் தன்மையோடு கூடிய அவிப்பலியாகிய கடன் ஒன்றுதான். நெற்றிக் கண் படைத்த குமரியாய்—தேவரும் போற்றும் பாவையாய் — விளங்கும் அவள் கோவிலை அடைந்தனர் கோவலனும் கண்ணகியும் கவுந்தி அடிகளும்.

மூவரும் கொற்றவையின் கோயிற்புறத்தே இளைப்பாறி இருந்த பொழுது, வேட்டுவக் குடியில் தெய்வத்திற்கு வழிபாடு ஆற்றும் உரிமை படைத்த சாலினி என்பாள், தெய்வம் ஏறப் பெற்று, மயிர் சிலிர்க்க, கானவர் வியக்கக் கைகளை உயர்த்தி, எயினர் தாம் கவர்ந்த பொருளைச் சேர்த்துண்ணும் நடுவூர் மன்றத்து அடி பெயர்த்து ஆடி, 'மறக்குடி மக்களே, நீங்கள் கொற்றவைக்கு—காளிக்கு—தரவேண்டிய கடனை இன்னும் தரவில்லை. அதனல், எயினர் மன்றுகள் யாவும் பாழ்பட்டன; பகைவர் ஊரில் பசு வளம் பெருகியது; நும்மவரின் வழிப்பறி வளமோ, வற்றிப் போயிற்று; நும் மறக்குடி மக்கள் எல்லாம் அறக்குடி மக்கள் போல

வலியடங்கிப் போனார்கள். கலை மான் ஏறி வரும் துர்க்கைக்கு நீங்கள் தர வேண்டிய காணிக்கைகளைத் தாராவிடின், அவள் உங்களுக்கு ஒரு சிறு வெற்றியும் வழங்கமாட்டாள்!' என்று முழங்கினாள்.

சாலினியின் 'தெய்வ முழக்கம்' கேட்ட எயினர் திரண்டனர். தம் தொல்குடிப் பிறந்த குமரியைக் கொற்றவையாக ஒப்பனை செய்தனர். அக்குமரியின் குறுகி நெளிந்த கூந்தலை நீண்ட சடையாக்கி அதில் சிறிய பாம்புக்குட்டிகள் போன்ற பொன் நாண்களைச் சுற்றிக் கட்டினர்; காவல் சூழ்ந்த தோட்டப்பயிரை அழித்த காட்டுப்பன்றியின் வளைந்த வெண் கொம்பைப் பிடுங்கிப் பிறையாக அமைத்தனர்; வீரஞ்செறிந்த வயப்புலியின் வாய் பிளந்து பெற்ற 'மாலை வெண்பல் தாலி'யை வரிசைப் படக் கட்டினர்; கோடும் புள்ளியும் கலக்கப் பெற்ற தூய புறத்தினை உடைய தோலை மேகலையாக உடுத்தினர்; அன்போடு வயிரவில்லை வளைத்து அவள் கையில் அழகும் ஆண்மையும் தோன்றக் கொடுத்தனர்; முறுக்குண்ட கொம்பினையுடைய கலை மான்மேல் அவளை ஏற்றினர். பாவையும், கிளியும், கானங்கோழியும், நீலமயிலும், பந்தும், கழங்கும் தந்து துதித்தனர்; வண்ணமும் சுண்ணமும் சாந்தமும்; அவரை, துவரை முதலியனவும்; எள்ளுருண்டையும், இறைச்சி கலந்த சோறும் பணி புரியும் மறப் பெண்கள் ஏந்தி வர, வழிப்பறியின் போது

கொட்டும் பறைமுழக்கி, சூறையாடும்போது ஊதும் சின்னமாம் கொம்பும் குழலும் ஊதி, மணி ஒலித்து, வழிபட்டனர்.

'குமரிக் கொற்றவை கோலம் பொருந்தியது; காளி கருணை புரிந்தாள்!' என்று மறவர் கூட்டம் களிப்பில் ஆழ்ந்தது. இந்நிலையில் காளியை வாழ்த்தி வேட்டுவர் புகழமைந்த பாடல்கள் பல பாடிப் போற்றலாயினர். அவ்வாறு வேட்டுவர் தம் தெய்வத்தைப் போற்றிப் புகழ்ந்த பான்மையினை வேட்டுவ வரியில் சுவை ததும்பக் கூறுகிறார் இளங்கோ அடிகள். கொலையுள்ளம் படைத்த வேட்டுவர் வாழ்க்கையிலும் கலையும் பத்தியும் கலந்திலங்கும் காட்சியை இளங்கோ அடிகள் முத்தமிழின் இனிமையும் பொருந்தித் திகழும் 'வேட்டுவ வரி'யில் கண்டு மகிழலாம். எயினர் வாழ்க்கையை இலக்கியமாக்கிக் காட்டும் அப்பகுதியில் இளங்கோ அடிகள், பத்திச் சுவையும் இசை நயமும் ஒன்றி உருவாகிய பல பாடல்களால் பாலை நில மக்கள் காளி வழிபாடு செய்யும் திறத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

இறுதியில்—தெய்வ வழிபாடெல்லாம் தீர்ந்தபின்—எயினர் குலமக்கள் செய்யும் செயலை—வாழ்த்தும் வாழ்த்தையே இங்கு நாம் சிறப்பாகக் கவனிக்க வேண்டும். 'சங்கரி, சுந்தரி, நீலி,' என்றெல்லாம் காளியை—தங்கள் தெய்வத்தை—வாழ்த்தி முடிக்கும் நேரத்தில்

பாசம் என்பது சிறிதும் இல்லா மறவர் நெஞ்சில் தேசபக்தி—ராஜபக்தி—கிளர்ந்தெழுகிறது. வழிப்போவாரை எல்லாம் பொருளில்லாவிடினும் குத்திக் குடைந்து அவர் துடிப்பதைக் கண்டு ஆரவாரம் செய்து ஆனந்தம் கொள்ளும் அவர்கள் மனத்திலும் நாட்டுப் பற்று!—அவர்கள் வாயிலும் அரச வாழ்த்து! ஆம்! தெய்வ வழிபாட்டையும் தேசவழிபாட்டில்—அரச வாழ்த்தில்—முடிக்கவே மறவர் குல மக்கள் விரும்பினார்கள். கொலை வில் வேட்டுவரே ஆயினும் அவர்கள் தமிழ் நாட்டு மக்கள் அல்லரோ? இதோ அவர்கள் இதய ஒலி:

'வேதங்களை அருளிய முதிய முதல்வனாகிய சிவபெருமானுக்குப் பின்னே தோன்றிய அகத்தியன் உறையும் குன்றுகளும் குளிர் தருக்களும் நிறைந்த பொதிய மலையை உடைய மன்னன் எங்கள் பாண்டிய வேந்தன். மாற்றார் முனையிடமும், அவர் நிரை மீட்கும் தொழிலும் பாழ்படும் வண்ணம் வெற்றியை விரும்பும் வீரனாகிய அவன் போர்த்தொடக்கத்தை அறிவிக்கும் வெட்சி மாலையைச் சூடுவானாக!'

> 'மறைமுது முதல்வன் பின்னர் மேய
> பொறையுயர் பொதியிற் பொருப்பன் பிறர்நாட்டுக்
> கட்சியும் கரந்தையும் பாழ்பட
> வெட்சி சூடுக விறல்வெய் யோனே!'
>
> (வேட்டுவ வரி, 23)

இறுதியாக உள்ள இந்த நான்கு அடிகளோடு

தான்—அரச வாழ்த்தோடுதான்-'வேட்டுவவரி' முடிகிறது; மறவர் வழிபாடும் நிறைவேறுகிறது.

வேதம் ஓதும் வேதியன் வாழ்த்தின் வாயிலாக எந்த நாட்டுப் பற்றுணர்ச்சியை நயமாக உணர்த்த இளங்கோ அடிகள் முனைந்தாரோ, அந்த நாட்டுப்பற்றுணர்ச்சியைக் கொடுமையே வடிவெடுத்த நெஞ்சுடைய வேட்டுவர் வாழ்க்கையாலும் அவர் புகட்டும் பண்பினை எண்ணுந்தோறும் 'தமிழ்ச்சுவை' அறிவார் நெஞ்சில் இன்பமும், இறும்பூதும், நாட்டுப்பற்றும், இறுமாப்பும் பொங்கிப் பெருகல் திண்ணம்!

# 5. பாண்டியன் புகழும் ஆய்ச்சியர் வாழ்த்தும்

வீர மறவரின் கொற்றவை வழிபாடு நிறைவுற்றது. அதைக் கண்டு களித்து நின்று கொண்டிருந்த கோவலன், குமரியின் கொற்றவை கோலமும் கூத்தும் முடிந்தவுடன் புண்ணியக் கவுந்தி அடிகள்பாற்சென்று, அவள் பாதத்தைத் தொழுது, 'அடிகளே, இக்காரிகை கொதிக்கின்ற கோடையைப் பொறுக்கமாட்டாள்; பருக்கைக் கற்கள் பரவிக் கிடக்கும் இவ் வெய்ய பாலையில் இவள் சீறடிகள் படியா; கதிரவனின் கடுமை நிறைந்த கொடிய இவ் வெயில் வேளையில் நடப்பதைவிடப் பல்லுயிரையும் குளிர்ச்சியூட்டிப் பாதுகாக்கும் நிலவொளியிலேயே நடந்து செல்வது நலம்,' என்று கூறினன்; மேலும், தன் கருத்துக்கு அரண் செய்யும் வகையில் தன் உள்ளக் கிடக்கையையும் விரித்துரைக்கலானன்:

'அடிகளே, இரவில் நடந்து செல்வதால் ஏதம் ஒன்றும் இல்லை. காட்டிலே விலங்குகள் உண்டு; எனினும், அது குறித்து நாம் அஞ்சிக் கலங்க வேண்டுவதில்லை. எதிர்ப்பட்டவற்றை எற்றிப் பற்றிக்கொள்ளுதலில் வல்ல குறிஞ்சி நிலக் கரடியும் பாம்பின் வளைந்த பெரும் புற்றைத் தோண்டாது; சூர்த் தெய்வமும் யார்க்கும் கேடு சூழாது; பாலை நிலத்தில் வாழும் ஒளி பொருந்திய கோடுகள் நிறைந்த வரி வேங்கையும் மானினத்தைப் பகைக்க மாட்டாது; மருத நிலத்தின் வளம் பெருக்கும் வான்முகில்களிடையே எழும் இடியும் ஒரு வித ஊறும் செய்யாது; இரை தேடித் திரியும் நெய்தல் நிலத்து முதலையும் எவர்க்கும் தீங்கு நினையாது; முல்லைக் காட்டிலும் எவ்விதக் கொடுமையும் நிகழாது. இவ்வைவகை நிலங் களும் செங்கோல் பாண்டியன் காக்கும் திருநா டென்று எங்கும் பரவிய புகழோ பெரிது! எனவே, பாண்டித் திருநாட்டில் வெயிலின் கொடுமை யன்றி வேறு கொடுமை இல்லை,' என்றான். இக்கருத்தை விளக்குவன பின் வரும் அடிகள்:

'கடுங்கதிர் வேனிலிக் காரிகை பொருஅள்;
படிந்தில சீறடி பரல்வெங் கானத்து;
கோள்வல் உளியமுங் கொடும்புற் றகழா;
வாள்வரி வேங்கையும் மான்கணம் மறலா;
அரவுஞ் சூரும் இரைதேர் முதலையும்
உருமுஞ் சார்ந்தவர்க் குறுகண் செய்யா;
செங்கோற் றென்னவர் காக்கும் நாடென

எங்கணும் போகிய இசையோ பெரிதே!
பகலொளி தன்னினும் பல்லுயி ரோம்பும்
நிலவொளி விளக்கின் நீளிடை மருங்கின்
இரவிடைக் கழிதற் கேதம் இல்.'

(புறஞ்சேரியிறுத்த காதை, 3-13)

இவ்வாறு கோவலன் கூறிய ஆர்வமொழி களில் அவன் உள்ளத்தில் நிறைந்திருந்த பாண்டி நாட்டுப் பத்தியும், பாண்டி வேந்தன் பத்தியுமே புலனாகின்றன. ஆம்! கோவலன் காவிரி நாட்டில் பிறந்து வளர்ந்த கலைச்செல் வன். ஆயினும், பாண்டி நாட்டின்மீதும் அந் நாட்டு அரசனது செங்கோல் ஆட்சியின்மீதும் அவன் கொண்டிருந்த காதலும் நம்பிக்கையும் அக்கால மக்களின் மனநிலையையும் தமிழகப் பற்றையுமே எடுத்துக் காட்டுகின்றன.

தார் வேந்தர்களின் போக்கால்—முடி யாட்சியின் விளைவால்—நாடாண்ட வேந்தரின் போர் விருப்பால்—தமிழகம் மூன்றாய்ப் பிளவு பட்டுக் கிடந்ததே ஒழிய, உண்மையில் தமிழ் மக்கள் உள்ளத்தில் ஒரு பிளவும் இல்லை. சோழனுக்கும் பாண்டியனுக்கும் போர்; பாண் டியனுக்கும் சேரனுக்கும் போர்; சேரனுக்கும் சோழனுக்கும் போர் என்ற நிலை ஏற்பட்ட போது 'அரசன் எவ்வழி அவ்வழிக் குடிகள்,' என்று மக்கள் நின்று தீரவேண்டிய கட்டாய நிலை ஏற்பட்டது. அவ்வாறல்லாமல், போர் வெறி நீங்கி அமைதி அரசோச்சிய தமிழகத் தில் மக்கள் அனைவரிடையேயும் 'நாம் எல்லோ

ரும் ஒரு குலம்; ஓரினம்; தமிழ்த்தாயின் மக்கள்; தமிழ் நாட்டின் குழந்தைகள்,' என்ற ஒருமை உணர்வே வேரூன்றி இருந்தது. 'வாழ்க்கையில் நம்பிக்கை ஒளி எங்கேனும் கிடைக்குமோ கரையேற!' என்று மனந்தடுமாறியிருக்கும் நிலையிலும் கோவலனுக்குத் தென்னவன் செங்கோல் மீது இருந்த நம்பிக்கையின் திண்மையைக் காட்டுவது வாயிலாக இளங்கோ அடிகள் பாண்டி வேந்தன் புகழின் பெருமையையும், கோவலனின் பரந்த உள்ளத்தையும் புலப்படுத்துகின்றார். அதோடு பழந்தமிழ் நாட்டு மக்களின் நாட்டுப்பற்றையும், உயிரனைய அரசன்பால் அவர்கள் கொண்டிருந்த அன்பையும், சிறுசிறு எல்லைகட்குள் தங்கள் சிந்தனையைக் குறுக்கிக்கொள்ளாமல் உயர்ந்த உள்ளம் உடையவர்களாய்—நாட்டுப்பற்றில் குறைவற்றவர்களாய் — அவர்கள் திகழ்ந்தார்கள் என்ற வாய்மையையும் விளக்கிக் காட்டுகிறார் என்றே தோன்றுகிறதல்லவா?

கோவலன் கூறிய கனிவு மொழிகளைக் கேட்ட கவுந்தி அடிகள், 'அவ்வாறே ஆகுக!' என இசைந்தார்.

வெங்கதிரோனும் மலைவாயில் வீழ்ந்தான். வெண்ணிலவும் தண்ணொளி பரப்பத் தொடங்கியது. கோவலன், கண்ணகி, கவுந்தி அடிகள் ஆகிய மூவரும் நிலவொளியில், காட்டு வழியில், மதுரை மூதூர் நோக்கிப் பயணமாயினர். காட்டு வழியெல்லாம் கடந்ததும், 'பொழுது

புலர்கின்றது; பகலவன் வருகின்றான்,' என் பன போலக் காட்டுக்கோழிகள் கூவின. மூவரும் வைகறைப் பொழுதில் தமக்குரிய ஒழுக்கத்தினின்று வழுவிய பார்ப்பனார் வதியும் ஒரு பகுதியைச் சேர்ந்தனர்.

கோவலன் ஆங்கு வந்த அரக்கரைப் பொருது வென்ற காளியின் போர்க்கோலத்தைப் பாடும் பாணருடன் சேர்ந்து யாழ் இசைத்து மகிழ்ந்து, பின் அவர்களிடம், 'இங்கிருந்து மதுரை மாநகர் இன்னும் எத்தனை காதம்?' என்று வினவினான். 'இதோ மதுரைத் தென்றல் வந்தது காணீர்; பாண்டியன் மூதூர் அருகேயே உள்ளது,' என்று பாணர் விடை பகர்ந்தனர்.

மூவர் பயணமும் தொடர்ந்தது; கடல் ஒலி போலும் ஆரவாரம் மிகுந்த மூதூரும் அவர்களை எதிர் கொண்டது. வைகையாற்றைக் கண்டு தொழுத ஐயனும் அம்மையும் மாதவத் தாட்டியாரோடு மரப்புணையால் அதைக் கடந்து தென்கரை எய்தினர். அறவோர் அன்றிப் பிறவோர் அணுகாத மூதூரின் புறஞ்சேரியின் கண் மூவரும் விரும்பிப் புகுந்து இருந்தனர்.

இரவு கழிந்தது; இரவியும் தோன்றினான். கழனிகளிலும் சோலைகளிலும் பறவைகள் எழுந்து ஒலித்தன. இறைவன் கோயில் முதலியவற்றில் வலம்புரி சங்கும் காலை முரசும் முழங்கின. கோவலன் கவுந்தி அடிகளை வணங்

கித் தன் மனத்துயரைப் புலப்படுத்தினன்; பொங்கி வரும் கண்ணீரோடு தன் எண்ணங் களை எடுத்துரைத்துப் புலம்பினன்; 'நெறியின் நீங்கினேன்; சிறுமையுற்றேன்; செய்தவத்தீர், முன்பின் அறியா நாட்டின்கண் முள்ளும் கல் லும் நிறைந்த அரிய வழியிடத்து அலைந்து திரிந்து வருந்தி அலமந்தேன்; பழமை பொருந் திய இந்நகர் வணிகர்க்கு என் நிலை உணர்த்தி யான் வருமளவும் அடிகாள், நும் திருவடிகளையே காவலாக உடையாள் இக்கண்ணகி. எனவே, இவளுக்கு ஒரு தீங்கும் உண்டோ?' என்று கல்லும் மண்ணும் கலங்க மொழிந்தான். ஆருத் துயருற்ற கோவல நம்பிக்குத் தம் குளிர் மொழி களால் ஆறுதல் கூறி அவன் உள்ளம் அமைதி யுறச் செய்தார் அருளே வடிவான கவுந்தி அடிகள்; 'பெருந்துயர் உற்ற போதும் மனைவி யுடன் பிரியா வாழ்க்கை பெற்றனை; ஆதலின், அயராது ஏகித் தங்குவதற்குத் தகுதி வாய்ந்த இடம் தேடி வருக,' என்று விடை கொடுத் தனுப்பினர். அடிகளாரின் அமுத மொழி களால் ஆறுதல் பெற்றுச் சென்ற கோவலன், செல்வமும் போகமும் செழித்துக் கிடந்த பாண்டியன் பேரூரைக் கண்டு களித்துப் புறஞ் சேரிக்கண் மீண்டான்.

அருள் நிறைந்த ஆட்சி நடத்தும் பாண்டி யர்களின் பெரிய சிறப்பினை உடைய செங் கோலும், வெண்கொற்றக் குடையினது தன்மையும், வேலின் வெற்றியும், தன்பால் வாழும் மக்கள் வேறெங்கும் பெயர்ந்து குடி

போகாச் சிறப்பும் புகழும் வாய்ந்த மதுரை மாநகரைக் கண்டு மகிழ்ந்த மன நிறைவுடன் புறஞ்சேரிக்கு மீண்ட கோவலன், கவுந்தி அடிகள்பால் சென்று, 'தீது தீர் மதுரையின்' பெருமையையும், 'தென்னவன் கொற்றத்தின்' கீர்த்தியையும் வாயாரப் புகழ்ந்து பேசினன். கரவற்றியாக் கோவலனது ஆழ்ந்தகன்ற தமிழ் நாட்டுப்பற்றை என்னென்று போற்றுவது! தான் பிறந்து வளர்ந்த சோழ நாட்டினும் வாழப்புகுந்த பாண்டி நாட்டின் வண்புகழையே அன்ருே அவன் வாயாரப் போற்றுவதைக் காட்டுகிருர் இளங்கோ அடிகள்! பழந்தமிழ் நாட்டு மக்களிடையே சோழநாடு, பாண்டிநாடு, சேரநாடு என்ற வேற்றுமை உணர்ச்சி, அமைதி தவழும் நாட்களில் அணுவளவும் இருந்ததில்லை என்பதற்குக் கோவலனின் மொழிகளினும் சிறந்த சான்று வேண்டுமோ?

இவ்வாறு பாண்டி நாட்டின் சிறப்பை எல்லாம் தமிழ் நாட்டின் சிறப்பாகவே கருதிப் போற்றிய கோவலன், கவுந்தி அடிகளிடமும் அவ்வமயம் அங்கு வந்திருந்த மாடல மறையோனிடமும் தான் கண்ட தீக்கனவின் தன்மையை அச்சத்துடன் எடுத்துரைத்தான். கோவலன் சொற்களுக்குச் செவி சாய்த்திருந்த கவுந்தியடிகளும் மறையவனும், 'இவ்வெயிற்புறத்துப் பள்ளியில் இருக்கும் இருக்கை முனிவர்க்கல்லது பிறர்க்கு ஒவ்வாதாகலின், இவ்விடத்தில் தங்குவதினின்றும் நீங்குவாயாக. கதிரவன் மறையு

முன் காதலியுடன் மாட மதுரைமா நகர் புகுக,' என அறிவுரை பகர்ந்தனர்.

அவ்வமயம் பூப்போலும் கண்களையுடைய இயக்கிக்குப் பாற்சோறு படைத்து வணங்கி விட்டு அங்கு வந்த ஆயர் முதுமகளாகிய மாதரி என்பாள் கவுந்தி அடிகளைக் கண்டு அடி தொழு தாள். அவளைக் கண்ட கவுந்தி அடிகள், 'தீதி லள்; முதுமகள்; செவ்வியள்; அளியள்' என் றெல்லாம் அவளைப்பற்றித் தமக்குள்ளேயே தேர்ந்து, கண்ணகியை அடைக்கலமாகத் தரக்கருதி, 'மாதரி, கேள்: என்னொடு போந்த இளங்கொடியாகிய இவள், கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வம். இவளன்றி வேறு தெய்வம் யான் கண்டிலேன். எனவே, இவளை நான் நின்பால் அடைக்கலமாகச் சேர்ப்பிக் கிறேன். தவத்தோர் அடைக்கலம், தான் சிறி தாயினும், மிக்க பேரின்பம் தரும். எனவே, இவளுக்கு ஆயமும் காவலும் தாயும் நீயே ஆகித் தாங்க வேண்டும்,' என்று பணித்தார். மாதரியும் கவுந்தி அடிகளைத் தொழுது, கண் ணகியை அழைத்துக்கொண்டு மதில் வாயிலைக் கடந்து, தன் மனை புகுந்தாள். மாலைக் கதிர வன் ஒளியும் ஒடுங்கி மறைந்தது.

மாதரியின் அன்பு மனையில் கண்ணகி அரும்பாடு பட்டு இனிதாகச் சமைத்த உண வைத் தன் கணவன் மகிழ்ந்து உண்ணும்படி செய்து அவனுக்கு வெற்றிலை பாக்கு அளித்து

நின்றாள். அப்பொழுது கோவலன் அவளை அருகழைத்து, 'நீ கொடிய கானகத்தின் வழியே நடந்து வந்தமைக்கு என் தாய் தந்தையர் என்ன துன்பமுற்றார்களோ!' என மொழிந்து, தன் சென்ற காலச் சிறுமையையெல்லாம் நினைந்து இரங்கி, 'ஈங்கு என்னொடு போந்து என் துயர் களைந்த பொன்னே, கொடியே, புனைபூங்கோதாய், நாணின் பாவாய், நீணில விளக்கே, கற்பின் கொழுந்தே, பொற்பின் செல்வி, நான் நின் சீறடிச் சிலம்புள் ஒன்று கொண்டு போய் விற்று வருவேன்; மயங்காதிரு,' என்று கூறி, அவளை அன்புடன் தழுவிக்கொண்டான்; அப்பொழுது தன்னந் தனியே அவள் இருக்கும் நிலை நினைந்து உள்ளம் வெதும்பிப் பொங்கி வரும் கண்ணீரை மறைத்தவனாய், எத்தனையோ தீச்சகுனங்கள் தன்னை எதிர்த்து வருவதையும் பொருட்படுத்தாமல், பீடிகைத் தெரு வழியே சென்றான்; பொற்கொல்லர் நூற்றுவர் பின் வர முன் வந்த ஒரு பொற்கொல்லனைக் கண்டு, விற்பதற்குத் தான் கொணர்ந்த சிலம்பினைக் காட்ட, அப் பொற்கொல்லன் — அரண்மனையில் அரசமாதேவியின் சிலம்பைத் திருடி அதை எவ்வாறேனும் மறைக்க வழி பார்த்திருந்த அக்கள்வன் —சதி செய்யத் துணிந்தான்; அரண்மனைக்கு விரைந்தான்; 'அரண்மனைச் சிலம்பைத் திருடிய கள்வன் அடியேன் குடிலில் வந்துள்ளான்,' என்று அரசனுக்குக் கூறினான். வினை விளை

காலம் ஆதலின், மன்னன் யாதும் தேராளுகி, ஊர் காப்பாளரைக் கூவி, 'ஈங்கு என் தாழ் பூங்கோதை தன்காற்சிலம்பு கன்றிய கள்வன் கையதாகில், கொன்று அச்சிலம்பினைக் கொணர்க!' என்று கட்டளை இட்டான். தீவினை முதிர் வலையில் சிக்கிய கோவலனுக்கு முடிவுக் காலம் நெருங்கியது. பொற்கொல்லன் காவலாளருடன் கோவலன் இருந்த இடத்திற்குச் சென்ருன். 'முகக்குறி முதலியவற்ருல் இவன் கள்வன் அல்லன் என்பது விளங்குகிறதே!' என்று கள்ளமறியாக் கோவலனைக் கொல்லக் கூசினார் காவலாளர். அது கண்டு பொற்கொல்லன் களவு நூல் ஏதுக்களை எல்லாம் எடுத்துக்காட்டி, அவர்கள் அறிவைக் கலக்கிக் கோவலன் கள்வனே என வற்புறுத்தினுன். இந்நிலையில் அறிவற்ற கல்லாக் களிமகன் ஒருவன் கைவாள், கருணையே வடிவெடுத்த கலைஞனுகிய கோவலனை இரு கூருக்கிற்று. ஆம்! கொலை—படுகொலை—பாண்டி நாட்டில் நடந்துவிட்டது! காவலன் செங்கோல் வளைந்தது. மண் மடந்தை ஆருத் துயருற்ருள். கோவலன் தரைமீது சாய்ந்து வீழ்ந்தான்.

கற்பரசி கண்ணகி நல்லாள் தங்கியிருந்த ஆயர்சேரியில் பலவகை உற்பாதங்கள் நிகழ்ந்தன. பாண்டியன் அரண்மனையில் காலை முரசம் முழங்கியது. அன்று மாதரி அரண்மனைக்கு நெய்யளக்கும் முறை. எனவே, அவள் கடைகயிறும் மத்தும் கொண்டு தயிர் கடையச்

சென்றாள்; தாழியைத் திறந்தாள். பிரையிட்ட பால் உறையவில்லை; தொழுவத்தில் காளைகள் கண்ணீர் சொரிந்த வண்ணம் நின்றன; நேற் றெடுத்த வெண்ணெயை உருக வைத்தாள்; அது உருகவில்லை; ஆட்டுக் குட்டிகள் துள்ளிக் குதித்து விளையாடாமல் முடங்கிக் கிடந்தன; பசுக்கள் உடல் நடுங்கி நின்று இரங்கின; ஆநிரைகளின் கழுத்திற்கட்டிய பெரிய மணி கள் அறுந்து வீழ்ந்தன. மாதரி திகைத்தாள்; 'வருவதோர் துன்பம் உண்டு!' என அஞ்சி னாள்; ஐயை என்னும் தன் மகளை நோக்கி, 'மனம் மயங்காதே! மண்ணின் மாதர்க்கணியா கிய கண்ணகி காண ஆயர்பாடியில் எரு மன் றத்து மாயவனுடன் தன்முன் ஆடிய வால சரிதை நாடகங்களில் வேல் நெடுங்கண் பிஞ்ஞை யோடு ஆடிய குரவையாடுதும் யாம்,' என்றாள்.

ஆய்ச்சியர் குரவை ஆரம்பம் ஆகியது. ஆயர் குலப் பெண்கள் கண்ணகி முன்னிலையில் குரவையாடினார்; பத்திச்சுவை நிறைந்த பாடல்கள் பல பாடிப் பரந்தாமனைப் போற்றிப் பரவினர்.

குரவைக் கூத்து முடியும் நிலையில் ஆயர் குலப் பெண்டிர், "'கஞ்சனின் வஞ்சகச் செயல் களை வென்றவனும், நாற்றிசையும் போற்றத் தன் பின்னே வேதங்கள் தொடர்ந்து வந்து முழங்கப் பாண்டவர்பொருட்டுத் துரியோதனதி யரிடம் தூதாக நடந்து சென்றவனுமாகிய கண் ணனைப் போற்றாத நா என்ன நா! நாராயணா

என்று நா என்ன நா!' என்று நாம் கூறித் தொடுத்த குரவைக் கூத்தினுள் போற்றிய கடவுள் நம் பசுவினத்திற்கு நேர்ந்த துன்பங்களை நீக்குக!" என்று கண்ணபிரானைப் பரவினர்.

இவ்வாறு ஆயர் மகளிர் ஆர்வத்துடன் செய்துகொண்டதாக இளங்கோ அடிகள் வரைந்துள்ள பிரார்த்தனைப் பகுதியைப் படிக்கும்போது இவ்வளவே அவர்கள் செய்யவேண்டிய—செய்திருக்கக்கூடிய—பிரார்த்தனை என்ற எண்ணம் நம் மனத்தில் எழுகின்றதல்லவா? ஆனால், உண்மை என்ன? ஆய்ச்சியர் உள்ளம் அதோடு ஆறுதல் அடையவில்லை. என்றும் நிகழாத தீக்குறிகள் தம் வீடுகளில் நிகழ்ந்திருக்கின்றன. அக்குறிகள் காட்டும் தீங்குகள் நேராதவாறு கருணைமாமுகிலாகிய இறைவன் அருள் சுரக்கவேண்டும். அவன் அருள் தங்கள் வீடுகளை மட்டும் பாதுகாத்தல் போதுமா? போதாது என்று நினைத்தனர் பழந்தமிழ் மாந்தர்—ஆயர் குல அரிவையர்.

இதோ! ஆய்ச்சியர் சொல்லிலும் செயலிலும் அந்தப் பண்பாடு புலனாகிறது. 'எங்கள் நாட்டு மன்னன் நலமாக இருக்க வேண்டும்! அவன் வெற்றியன்றி வேறொன்றும் காணா விறல் உடையோனாய் விளங்கவேண்டும்! இடியைப் படையாக உடையவன் இந்திரன். அவன்முடித்தலையை உடைத்த தொடித்தோள் உடைய வீரத் திருவினன் பழம்புகழ் வாய்ந்த

பாண்டி மன்னன். குணிலால் எறியப்படும் அவன் முரசம் பகையரசர் மயங்கும் வண்ணம் நாள்தோறும் பகைவர்களைக் கொன்று மேலும் மேலும் அவனுக்கு வெற்றியைத் தந்து விண்ணதிர முழங்குவதாக!' என்று வாழ்த்தினர்.

'கோத்த குரவையுள் ஏத்திய தெய்வநம்
ஆத்தலைப் பட்ட துயர்தீர்க்க; வேத்தர்
மருள வைகல் வைகல் மாறட்டு
வெற்றி விளைப்பது மன்னே கொற்றத்து
இடிப்படை வானவன் முடித்தலை யுடைத்த
தொடித்தோள் தென்னவன் கடிப்பிகு முரசே!'
(ஆய்ச்சியர்குரவை: படர்க்கைப் பரவல், 3)

'பழம்பெருமை வாய்ந்த பாண்டி வேந்தன் புதுப்புது வெற்றிகள் பெற்றுப் புகழுடன் விளங்க வேண்டும்,' என்பதே ஆயர் குலப் பெண்கள் ஆண்டவனிடம் செய்துகொள்ளும் பிரார்த்தனை. தெய்வபத்தி நிறைந்த இவர்கள் பிரார்த்தனையில் தேசபத்திக்கு எவ்வளவு உயிரான இடம் அமைந்துள்ளது! ஆம்! இதுதான் பழந்தமிழ் மக்களின் நாட்டுப்பற்று நிறைந்த உள்ளத்தின் வீரமுழக்கம்.

திருமண அரங்கில்–மாதவி மாளிகையில்–இந்திர விழாவில்—குன்றக் குரவையில்—வேதியன் பேச்சில்— வேட்டுவவரியில்—கோவலன் மொழிகளில் எந்தத் தமிழகப்பற்றின்—ராஜ பத்தியின் — தேச பத்தியின் முழக்கத்தைக் கேட்டோமோ, அதே முழக்கத்தை அல்லவா அஞ்சத்தக்க தீய அறிகுறிகள் தோற்றிய

நேரத்தில் ஆண்டவனை வழிபடும் ஆய்ச்சியர் பாடும் பாட்டிலும் செய்யும் பிரார்த்தனையிலும் கேட்கிறோம்! திகைப்படைந்து திடுக்குற்றுத் துயருற்ற நேரத்திலும் தங்கள் தேசத்தை—திருவுடை மன்னனை—மறவாது போற்றும் பழந் தமிழ் மக்களின் நாட்டுப்பற்றை நினைக்கும் போது நம் நெஞ்சிலே ஊறும் இன்பத்திற்கும் நம் தோள்களிலே ஏறும் வீரத்திற்கும் ஒரு வரம்பும் உண்டோ!

# 6. வேந்தனை எதிர்த்து வீரப்புரட்சி ★

'நல்லறம் நாடிய மன்னரை நயந்து மகிழ்ந்து போற்றுவாள் எங்கள் தாய்; அவர் அல்லவராயின், கொன்று விழுங்கிப் பின் ஆனந்தக் கூத்திடுவாள் எங்கள் தாய்,' என்று அன்னை பராசத்தியின்—பாரத சத்தியின்—பெருமையைப் பாடினார் அரசியல் வெறி கொண்ட ஆவேசக் கவிஞர் பாரதியார். ஆம்! பின்னளில் இரத்தினச் சுருக்கமாக அவர் பாடிய இப்பாட்டு, சிலப்பதிகார மதுரைக் காண்டத்தை அவர் ஊன்றிக் கற்றதால் கனிந்த கவிதையோ என்று நாம் சிந்திக்க வேண்டியுள்ளது.

துன்பமாலை தொடங்கி அழற்படு காதை ஈறுக அமைந்துள்ள ஐந்து காதைகளிலும் சிலப்பதி கார நாடகத்தின் உச்ச நிலையைக் காண்கி றோம்; காவியத்தின் உயிர்நிலைப் பகுதியைப்

பார்க்கிறோம்; கண்ணகியின் கற்பின் பெருமை 'மன்னும் இமயமலை போல' ஓங்கி உயர்ந்து நிற்கும் நிலையைக் காண்கிறோம்; சமுதாயக் கடலில் புரட்சி அலைகள் விண்முட்ட எழுந்து வீசும் நிலையை அறிகிறோம்.

ஆய்ச்சியர் குரவை முடிந்தது. திருமாலையும் திருவுடை மன்னனையும் தங்கள் இல்லத்தில் நேர்ந்த தீச்சகுனங்கள் கண்டு கலங்கிய இடைக்குல மகளிர் ஆடிப்பாடி வாழ்த்தி வணங்கிய காட்சியும் முடிந்தது.

இவ்வாறு குரவை முடிந்ததும் வையையில் நீராடி நெடுமாலை வழிபடச் சென்றாள் மாதரி. அப்போது நகரத்தின் உட்பகுதியினின்றும் காட்டுத் தீப்போலப் பரவி வரும் கொடிய செய்தியை — கோவலன் கொலையுண்ட தீச்செய்தியை—கேள்வியுற்று இடியொலி கேட்ட மயில் போல உடைந்த மனமுடையவளாய் ஒருத்தி வந்து கண்ணகி முன்னே கற்சிலை போல நின்றாள். சொல்லாடாளாய்—ஒளி இழந்த ஓவியமாய்—நின்ற அவளைக் கண்ட கண்ணகியின் நெஞ்சம் பதைபதைக்கலாயிற்று. அவள் உள்மனத்தில் முடங்கிக் கிடந்த எண்ணங்கள் கடல் அலைகள் போலக் குமுறிக்கொண்டு வெளி வரலாயின.

'காதலரைக்காண்கிலேன்! என் உள்ளம் கலங்கி மிகவும் வருந்துகிறது! ஊதுலையும் தோற்கும்படி உயிர்க்கிறது என் நெஞ்சம்! தோழி,

அயலார் கூறிய மொழி யாதோ? நடுப்பகலிலேயே என் நெஞ்சம் மிக நடுங்கியது! அன்பரைக் காணாது அயர்வுறுகிறது என் உள்ளம்! இந்நிலையில் மன்பதை சொன்னது யாதோ? நாயகரைக் கண்டிலேன்! இனி எனக்கோர் அடைக்கலமும் உண்டோ? ஏதோ வஞ்சம் நடந்துவிட்டது! எனவே, ஏனையோர் சொன்ன சொற்கள் யாவையோ?' என அரற்றி அழுது புலம்பினாள் கண்ணகி.

கண்ணகியின் புலம்பலைக் கேட்ட ஐயை வாய் பதறி மனம் பதறித் தான் கேட்ட செய்தியை நடுங்கும் குரலில் தெரிவித்தாள். 'அரசனது கோயிலிலிருந்த அழகிய சிலம்பினை அரவம் சிறிதும் இன்றிக் கவர்ந்த கள்வன் என்று கூறி, ஊர் காவலர் கோவலனைக் கொலை செய்தலைக் கருதினர்.' இதுவே அவள் நவின்ற செய்தி. கேட்டாள் கண்ணகி; பொங்கி எழுந்தாள்; முகிலொடு நிலா மண்மிசை வீழ்ந்ததெனை வீழ்ந்தாள்; செங்கண் சிவப்ப அழுதாள்; 'ஆருயிர்த் தலைவரே, யாண்டுளீர்?' என்று கூவி வருந்தி ஏக்கமுற்று மயங்கினாள். அத்துடன் அமைந்தனளோ! விநாடிக்கு விநாடி அவள் ஆத்திரம் பெருகியது. 'நாடாளும் மன்னவன் செய்த தவற்றால் கணவனை இழந்து மற்றைப் பெண்டிரைப் போல மனமிடிந்து துயருற்று மாழ்குவனோ?' என்று அரற்றினாள். இறுதியாகத் தீதெல்லாம் தீர்ந்து நன்மை பெருக மாதரி வீட்டில் ஆடிய குரவைக் கூத்தினுள்

வந்து சேர்ந்த இடைக்குலப் பெண்டிர் அனை வரையும் நோக்கி, 'எல்லோரும் கேளுங்கள்!' என்று கூறி, காய்கதிர்ச் செல்வனை நோக்கி, 'உலகத்துத் தோன்றும் பொருள்கள் யாவற் றையும் அறியும் ஆதவனே, நீயறிய என் கண வர் கள்வரோ? சொல்,' என்றாள். 'மாதே, நின் கணவன் கள்வனல்லன். அவனைக் கள்வ னென்ற இவ்வூரினைத் தீயுண்ணும்,' என்றது எங்கிருந்தோ ஒரு குரல்.

கதிரவனை நோக்கிக் கதறிய கண்ணகிக்குப் பதிலாகக் கிடைத்த அக்குரல் மேலும் அவள் பால் சினத்தீ மூண்டெரியத் தூண்டுகோலா யிற்று. ஒற்றைச் சிலம்பைக் கையிலேந்திப் புறப்பட்டாள் கண்ணகி. மதுரை வீதிகளில் அவள் புரட்சிக்குரல் முழங்கியது. 'முறைகெட்ட மன்னன் ஊரிலிருந்து வாழும் நிறையுடைப் பத்தினிப் பெண்டிர்களே, கேளுங்கள் என் சபதத்தை: என் கணவர் கள்வரே அல்லர். என் காற்சிலம்பு கொள்ளும் விலைப்பொருட் டால் அவரைக் கொன்றனர். ஈதோர் அநி யாயம்! யான் கூறும் இச்சொல் வாய்மையே என வையகம் அறிய, இறந்த என் கணவர் உயிரோடு எழவும், அவர் வாயால் தீதறு நல் லுரை கேட்கவும் பெறுவேன். அவ்வாறு என் காதற்கணவர் வாய் திறந்து கூறும் வார்த்தைகளைக் கேளாமல் போவேனாயின், 'இவள் நமக்கு வருந்தத் தக்கன செய்தாள்' என்று என்னை இகழுங்கள்!' என்று சூளுரைத்

தாள் கற்பரசி கண்ணகி. மதுரை வீதிகளில் கண்ணகி உரைத்த சபத மொழிகளைக் கேட்ட கூடல் மாநகர மக்களின் நெஞ்சில் தீப்பற்றி எரியத் தொடங்கியது.

'நீக்க ஒண்ணாத துன்பத்தினை இக்காரிகைக்குக் காட்டி வளையாத செங்கோல் வளைந்ததே! மன்னவர் மன்னன்—மதியனைய குடை தாங்கிய வாள் வேந்தன்—தென்னவன் கொற்றம் குலைந்ததே! உலக உயிர்கட்கு எல்லாம் குளிர்ச்சியையே ஊட்டும் மாறனது வெண் கொற்றக் குடை, கொதிக்கும் வெம்மையுடையதாயிற்றே! இக்கொடுமைக்கு யாது காரணமோ! தவறிழைத்த பாண்டியன் தலை நகரில் செம் பொற்சிலம்பு ஒன்றைக் கையிலேந்தி நம்மை உய்விக்கும்பொருட்டுப் — புதிய—பெரியதொரு தெய்வம் வந்துற்றதே! இதனால் மேலும் விளைவது யாதோ! அழுது ஏங்கி அரற்றும் இவ் வம்மை தெய்வம் உற்றாள் போலன்றோ திகழ்கின்றாள்? யாது வளையுமோ இனி!' என இவ்வாறு சொல்லி வருந்தி ஏங்கிய மதுரை மக்கள் நெஞ்சில் கண்ணகி மூட்டிய புரட்சித் தீயால் அவர்கள் எத்தகைய நிலை அடைந்தனர் என்பதை இளங்கோ அடிகள் நயம்பட எடுத்துக் காட்டும் திறம் அம்மகா கவி மக்களின் மன வியல்பை (Mass psychology) எவ்வளவு நன்றாக உணர்ந்து அனுபவித்தவர் என்பதை நமக்குத் தெற்றன விளங்கச் செய்கிறது. பாண்டியன் புகழ் அன்றி வேறெவர் புகழையும் போற்ற

விழையாத மதுரை நகர் மக்கள், மன்னனை மிகவும் பழிதூற்றும் மக்கள் ஆகிவிட்டார்களாம். இவ்வுண்மையை இளங்கோ அடிகளே,

> 'வன்பழி தூற்றுங் குடியதே மாமதுரைக்
> கம்பலை மாக்கள்' (ஊர் சூழ்வரி, 28-29)

என்ற மொழிகளால் விளங்க வைக்கிறார்.

கண்ணகியின் ஆவேசக் கோலத்தாலும் ஆத்திர மொழிகளாலும் சீற்றமுற்ற மதுரை மூதூர் மக்கள்—அல்வழிப்பட்ட அரசனைக் 'கொடியன் எம் இறை' எனக் கண்ணீர் பரப்பிப் பழி தூற்றத் துணிந்த மக்கள்—கண்ணகியைக் கொலையுண்டு கிடந்த கோவலனிடம் அழைத்துச் சென்று காட்டினர். அந்தோ! அந்நேரத்தில் தன் ஆருயிர்க்காதலன் வெட்டுண்டு வீழ்ந்து கிடக்கும் கோரக் காட்சியைக் கண்டு புழுவாய்த் துடிக்கப் போகிறாள் கண்ணகி என்பதை அறிந்த பகலவனும், பேரிருளை உலகிற்கு ஊட்டிக் கரிய மேற்கு மலையின்கண் தன் சிவந்த கதிர்களைச் சுருக்கிக்கொண்டு வீழ்ந்து மறையலானான். அந்நிலையில் கோவலன் வீழ்ந்து கிடந்த இடத்திலிருந்து கண்ணகி அழுது அரற்றிய அரற்றலால் நகரெங்கும் 'ஒல்'லென்ற ஒலியே நிரம்பியது.

வெட்டுண்டு கிடந்த கோவலனை வாரி எடுத்து அணைத்துக்கொண்டாள் கண்ணகி. காலையில் தன் கணவன் முடியில் சூடியிருந்த மாலையை வாங்கித் தனது நீண்ட குழலினிடத்

துச் சூடிக்கொண்ட கண்ணகி, இப்போது மாலை நேரத்தில் வெட்டுண்ட இடத்திலிருந்து கொப்பளித்து எழும் இரத்தம் உடலை எல்லாம் நனைக்கத் தன்னைக் கண்திறந்து காண ஒண்ணு நிலையில் தன் கணவன் இருக்கும் நிலை கண்டு, ஆறாத் துயருற்று, அலமந்தாள்; பலவாறு புலம்பினுள்.

'என் மீளாத் துயர் கண்டும் யான் இடருறுவேனே என்று எண்ணுகின்றிலிரே! ஆருயிர்த் தலைவரே, சந்தனத்தின் மணம் கமழும் உம் பொன்னை மேனி புழுதி படிந்து கிடப்பதோ!' என்று வருந்தி வாடினுள் கண்ணகி. ஆயினும், கண்ணகியின் துயரக் கண்ணீர் அவளுடைய உள்ளத்தில் கனன்றுகொண்டிருந்த புரட்சிக் கனலை அவித்துவிடவில்லை. அக்கனல் செந்தணலாய் எழுநா விட்டுப் பற்றி எரியத் தொடங்கியது. 'என் கணவர் வாளுக்கு இரையானதும் எனக்கு நேர்ந்த துயரும் 'தலை விதியின் விளைவு' என்று உலகில் எவரேனும் எண்ணிவிடுவரோ! மன்பதை பழி கூற முறை கெட்ட மன்னன் ஆட்சிக்கு உயிர்ப்பிச்சை கிடைத்துவிடுமோ!' என்று அவள் கொண்ட ஐயம் அழுகையாய் ஆத்திரமாய் உருக்கொண்டது. நேரடியாக, 'அவ்வாறு கருதல் கூடாது' என்று அறிவுறுத்தித் தன் நெஞ்சக் கருத்தை வெளிப்படுத்துவதினும் — வேறு வகையாக — வினவும் முகத்தான் கூறுவதே ஆற்றலும் பயனும் நிறைந்ததாக அமையும் என்று கண்ணகி

யின் உள் மனம் கருதியது போலும்! ஆம்! அதனாலேதான் அவள் உள்ளத்தின் கருத்துப் போலவே அவள் வாக்கும் அமைந்துள்ளது.

> 'பார்மிகு பழிதூற்றப் பாண்டியன் தவறிழைப்ப
> ஈர்வதோர் வினைகாண் இதுவென வுரையாரோ?'
>
> (ஊர் சூழ்வரி, 45-46)

என்று தன் துயரத்தைப் புலப்படுத்தினாள் கண்ணகி. ஆனால், அதனாலும் அவள் உள்ளம் ஆறுதல் கொள்ளவில்லை. அவள் உணர்ச்சியின் கொடுமுடியில் நின்று குமுறினாள்.

'தீ வேந்தன் வாழும் இத்தலை நகரில் கொண்ட கணவரின் மிக்க குறையைப் பொறுக்கின்ற கற்புடைய மகளிரும் உண்டோ! கற்புடைய மகளிரும் உண்டோ! பிறர் ஈன்று விட்ட குழந்தைகளைத் தம் குழந்தை போல எடுத்து வளர்க்கும் கருணை இதயம் படைத்த சான்றோர்கள் உண்டோ! சான்றோர்கள் உண்டோ! ஏன்—மன்னவனே தவறிழைத்த மாட மதுரையில் தெய்வந்தான் உண்டோ! தெய்வந்தான் உண்டோ!' என்று இவ்வாறு உணர்ச்சியின் எல்லையில் நின்று அவள் கூறிய மொழிகள் இறந்த கோவலனையும் எழுப்பின; மதுரை மாநகர் வாழ்ந்த மக்கள் அனைவரையும் கண்ணகியின் வீரப்புரட்சி, வெற்றி காணத் துணை புரியும் மனம் பெறச் செய்தது.

எல்லை கடந்த தன் மனத்துயரை—ஆவேச வெறியை—எண்டிசையும் கேட்டு நடுங்க முழங்

கிய கண்ணகி, அவல உணர்ச்சியின் மேலீட்டால் விம்மி அழுது, தன் கணவனது 'பொன் துஞ்சு மார்பம் பொருந்தத் தழீஇக்'கொண்டாள். அந்நிலையில் மாண்ட கோவலன் நின்ருன் எழுந்து; 'மதிபோன்ற முகம் கன்றியதே!' என்று தன் வாயாற்கூறிக் கண்ணகியின் கண்ணீரைத் தன் கையால் துடைத்தான். கண்ணகி புலம்பி நிலத்தின்கண் விழுந்து தன் காதலனுடைய தொழத்தக்க திருந்திய அடிகளைத் தனது வளையணிந்த இரு கைகளாலும் பற்றிக்கொண்டாள். 'நீ இங்கிருக்க,' என்று சொல்லித் தேவர் கூட்டத்துள்ளாளுய் வானுலகு புகுந்தான் கோவலன்.

விந்தை மிக்க இக்காட்சியைக் கண்ணகியின் கண்களாலேயே உண்மை என்று நம்ப முடியவில்லை. 'இது என்ன மாயமோ! என்னை மருட்ட வந்த தெய்வத்தின் செயலோ! வேறு யாதோ! இனி யாண்டுச் சென்று என் கணவரைத் தேடுவேன்! நான் கேட்டதும் மெய்யுரையோ! சரி! கணவரே ஆயினும், என் காய்சினம் தணிந்தால் அன்றி, அவரைக் கூடேன். தீய வேந்தனைக் கண்டு அவன் அநீதி புரிந்ததற்குக் காரணத்தைக் கேட்டே தீருவேன்!' என்று கூறிச் சீறி எழுந்தாள் இத்தனை நாளும் ஆறிய கற்புடையவளாய் இருந்த கற்பரசி கண்ணகி. சீறி எழுந்தவள், சற்றே நின்ருள்; தான் கண்ட தீக்கனவை நினைத்தாள்; துயருற்ருள்; கயல் போன்ற கண்களினின்றும்

பொங்கி வரும் நீரைத் துடைத்துக்கொண்டே காற்றோடு கலந்த தீப்போல விரைந்து சென்றாள் வேந்தன் அரண்மனையின் வாயிலை நோக்கிப் புரட்சி விளைக்க.

பழந்தமிழ் மக்கள், 'நெல்லும் உயிரன்றே; நீரும் உயிரன்றே; மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்,' என்று நினைப்பவர்கள்தாம். ராஜபத்தியை உயிரினும் சிறந்ததாகப் போற்றுபவர்கள்தாம். அத்தகைய நாட்டுப் பற்று நிறைந்த பரம்பரையின் வீரச் செல்விதான் கண்ணகி. ஆயினும், அவள் மேற்கொண்ட துணிவும் குறிக்கோளும் பழந்தமிழ்ப் பண்பாட்டிற்கே புதியதொரு விளக்கம் தருவனவாயின. இன்னுயிரினும் இனிதாக நாடாளும் இறைவனைப் போற்றிய இனம் பழந்தமிழ் இனம். எனினும், அது அவன்பால் கொண்டிருந்த பத்தி கண் மூடிப் பத்தி அன்று. 'இங்கிலாந்தின் மன்னன் தவறே இழைக்கமாட்டான்,' என்ற 'நவயுக நாகரிகத்தின் பிதாக்கள்' என்று சிலரால் கருதப்படும் வெள்ளையரின் குருட்டுக் கொள்கை, பழந்தமிழ் மக்களின் பகுத்தறிவிற்கும் பண்பாட்டிற்கும் ஒவ்வாததாகும். 'பெண்டிற்கு நாணம் உயிரினும்சிறந்ததுதான். ஆனால், அதனினும் சிறந்தது அவர்கட்குக் கற்பு,' என்பது ஆன்றோர் மொழியன்றோ? அவ்வாறே பழந்தமிழ் மக்கட்கு ராஜபத்தி உயிரினும் பெரியதுதான். ஆயின், அதனினும் அவர்கட்குப் பெரியது தேசபத்தி. 'மன்

பதைக்காக மன்னனே அன்றி, மன்னனுக்காக மன்பதை அன்று,' என்னும் இவ்வுண்மையே பழந்தமிழர் அரசியல் பண்பாட்டின் ஆணிவேர் என்பதை உலகறியச் செய்த ஒப்பில்லாவாழ்க்கை கண்ணகியின் வீரவாழ்க்கை. 'குடிமக்கள் கொதிக்கும் உள்ளத்தால் சிந்தும் கண்ணீரே கூர்வாளினும் கொடியது. பெருஞ் சேனைகளாலும் அழிக்க முடியாத பேரரசுகள் கற்புடைய பெண்ணின் கண்ணீரால் அழிந்து சாம்பலாகும்,' என்ற உண்மைகளைப் பன்னூறு ஆண்டுகட்கு முன்பே தனியொரு தமிழ் மங்கை வேந்தனை எதிர்த்து நடத்திய வீரப்புரட்சி வாயிலாக இளங்கோ அடிகள் விளங்க வைக்கும் திறம் இணையிலாப் பெருமை வாய்ந்தது. இவ்வுண்மை இனி வரும் சிலப்பதிகாரப் பகுதிகளாலும், உடலை—உள்ளத்தை—உயிரையே குலுக்கும் சொல்லோவியக் காட்சிகளால், இனிது விளங்கும் என்பது திண்ணம்.

# 7. முதற்கட்டம் முடிந்தது!



வீரக்கண்ணகியின் இடிமுழக்கம் மதுரை மாநகர் மக்கள் இதயத்தைப் பெரிதும் கலக்கியது; 'கோவேந்தன் கொடியவனுனன்!' என அவர்கள் வாய் பழி தூற்றும்படி செய்தது. இந்நிலையில் சிறிதும் அமைதி அற்றவளாய்ச் சீற்றம் மிகக் கொண்டு கண்ணகி பாண்டிய வேந்தன் அரண்மனையை நோக்கிப் பொங்கி வரும் கண்ணீரைச் செல்வதற்குரிய வழி தெரியும்பொருட்டுத் துடைத்துக்கொண்டே புயலென விரைந்து சென்றாள்.

அங்கே பாண்டியன் மனைவி — கோப் பெருந்தேவி—தான் கண்ட ஒரு தீக்கனவைத் தன் தோழியிடம் தெரிவித்துக்கொண்டிருந்தனள். 'தோழி, தீக்கனவொன்று கண்டேன்; அதில் நம் அரசர் செங்கோலும் குடையும்

நிலத்தில் வீழ்ந்தன; ஆராய்ச்சி மணி நடுநடுங்கியது; எட்டுத் திசைகளும் அதிர்ந்தன; சூரியனை இருள் விழுங்கியது; இரவில் வானவில் தோன்றியது; வெம்பகலில் விண் மீன்கள் வீழ்ந்தன; ஏதோ துன்பம் நேரப்போகிறது! தோழி, வா, அரசரிடம் சென்று சொல்லுவோம்,' என்றாள் பாண்டி நாட்டு அரசி.

பின்னர்த் தோழியர் புடை சூழ மன்னனிடம் சென்று தான் கண்ட தீக்கனவினை உரைக்கப் புறப்பட்டாள் கோப்பெருந்தேவி. அவளைச் சூழ்ந்து சேடியர் பற்பல மங்கலப் பொருள்களை ஏந்திப் பின் சென்றனர்; கூனர், ஊமைகள், குள்ளர்கள் கூடிய குற்றேவலாளர் சூழ்ந்து வந்தனர். முதிய மங்கையர் வாழ்த்தினர். 'வையம் காக்கும் பாண்டியன் பெருந்தேவி வாழ்க!' என்று ஆய் மகளிரும் காவற் பெண்டிரும் அரசியின் அடி பணிந்து புகழ்ந்தேத்தினர். இச்சிறப்புக்களுடன் கோப்பெருந்தேவி அரசனை அணுகித் தான் கண்ட தீக்கனாத் திறமுரைத்தாள். திருவீழ் மார்பினனாகிய தென்னவர் கோமான், தேவியின் சொற்களை வியப்புடன் கேட்டுக்கொண்டிருந்தான். அந்தோ! தேவியின் சொற்களைக் கேட்டுக்கொண்டிருந்த அவன் திருச்செவிகளை இன்னும் சிறிது நேரத்தில் வேதனை நிறைந்த சொற்கள் தீயெனத் தீண்டிக் கொல்லக் காத்திருந்தன!

அந்நிலையில் தலைவிரி கோலமாய் அழுத கண்ணீரோடும் ஏந்திய சிலம்போடும் அரண்மனையை நோக்கிப் பாய்ந்துவரும் கண்ணகியின் கோலம் கோவேந்தனின் காவலாளியையே கலங்கச் செய்தது. அவன் கலக்கத்தைப் பன்மடங்காக்கின வீரக்கண்ணகியின் சுடுசொற்கள். 'வாயிலோயே! வாயிலோயே! அறிவு அற்றுப்போன—அறநினைவு அற்ற—வறியோனின் வாயிலோயே! தன் கணவனை இழந்தாள் ஒருத்தி, பரலினையுடைய இரண்டு சிலம்பினுள் ஒன்றனை ஏந்திய கையளாய் அரண்மனையின் வாயிலிடத்தாள் என்று அறிவிப்பாயே! அறிவிப்பாயே!' என்று முழங்கினாள்.

கேட்டான் வாயிலோன்; விரைந்தான் வேந்தன்முன்; 'எம் கொற்கை நகரத்து வேந்தரே, வாழி! தென்திசைப் பொதியிலின் தலைவரே, வாழி! செழியரே, வாழி! பழியொடு படராப் பஞ்சவரே, வாழி! வென்றி தரும் வேலினைத் தாங்கிய கொற்றவையும் அல்லள்; பிடாரியும் அல்லள்; காளியும் அல்லள்; ஆனால், அவள் தோற்றம் அஞ்சத் தக்கதாய் இருக்கின்றது. அவள் செற்றமும் வெகுளியும் மிகவும் கொண்டவளாய்த் தோற்றுகிறாள். தொழில் திறம் அமைந்த பொற்சிலம்பு ஒன்றை ஏந்திய கரத்தொடு கணவனை இழந்தாள் ஒருத்தி, அரசரே, நம் வாயிலின் முன்னிடத்தே வந்து நிற்கிறாள்! ஆம்! முன்னிடத்தே வந்து நிற்கிறாள்!' என்று

செய்தியைக் கூறினன். கேட்டான் வேந்தன். 'அவள் வருக! உடனே அவளை அழைத்து வருக!' என்று கட்டளை இட்டான்.

இருளின் முன் ஒளி போலப் பாண்டியன் முன் சென்று நின்ருள் நீர்வாரும் கண்களோடு வீரபத்தினி. அழுத கண்களோடு அவள் நிற்கும் நிலையைக் கண்ட மன்னன், 'மடக் கொடியே, நீர் சொரியும் கண்ணோடு என் முன்னே வந்த நீ யாரோ?' என்ருன். ஊனும் உயிரும் துடிக்கத் தான் வந்த காரணத்தை இன்னும் உய்த்துணராமல் வேந்தன் விளம்பிய வெற்றுபசாரமொழிகளைக் கேட்ட வீரக் கண்ணகி, பளீர் எனப் பதிலுரைத்துப் பேசலானள். 'ஆராய்ச்சி அறிவில்லாத மன்னனே, என்னை 'யார்?' என்றல்லவா கேட்டாய்? கூறுகிறேன்; கேள்: பொன்னி நாட்டு மன்னனைப்பற்றி நீ அறிவாய் அல்லவா? ஆம்! அளத்தற்கரும்பெருமையுடையது அவன் அரச பரம்பரை. புரு ஒன்றின் உயிரைக் காக்கத் தன் ஊனை அரிந்து கொடுத்த உத்தமன் சிபிச் சக்கரவர்த்தி உதித்தது அம்மரபு. பசு வொன்று ஆராய்ச்சி மணியைப் பதறி அடித்துக் கண்ணீர் உகுத்தது அறிந்து அதன் துயர் தீர்க்கத் தன் ஒரே மைந்தனைத் தேர்க்காலில் இட்ட நீதி வழுவா நெறியாளனுகிய மனுநீதிச் சோழன் பிறந்தது அம்மரபு. அத்தகைய அற நெறி வழுவா அரசர் ஆண்ட பெரும்பெயர்ப் புகார்தான் நான் பிறந்த பேரூர்,' என்ருள்

கண்ணகி. என்னே அவள் தேசபத்தி! தேச பத்தியிலும் தன்னைப் பெற்றெடுத்த பகுதியின் பால் இருந்த தனி பத்தி! தமிழகப்பற்றில் யாருக்கும் குறைந்தாள் அல்லள் வீரக்கண்ணகி; ஆயினும், தான் பிறந்த சோழ நாட்டிடத்துத் தனி அன்புடையவள். இந்த இருபதாம் நூற்றாண்டிலேயே உலகம் போற்றும் சர்வ தேசிய அறிஞர்களின் உள்ளத்திலேயே இத்தகைய பற்று தான் பிறந்த ஊரிடத்தும்—நாட்டிடத்தும்—மாவட்டத்திடத்தும்—இருப்பதைக் காண்கிறோம் என்றால், ஈராயிரம் ஆண்டுகட்கு முன் கண்ணகியின் உள்ளத்தில் இத்தகைய தனிப்பட்ட அன்பு இருந்தது மிகவும் இயற்கையே அன்றோ?

தன் நாட்டின் புகழைப் பேசியதோடு நிற்கவில்லை கண்ணகி. அறநெறி பிறழ்ந்த மன்னனுக்குத் தன் நாட்டின் அறமணம் கமழும் புகழை எடுத்துக்கூறி 'யார் நீ?' என்று கேட்ட காவலன் இதயத்தில் இடிவிழ—சித்தம் கலங்கச் செய்தாள் கற்பரசி. மேலும் பேசலானாள்: 'அத்தகைய அறப்பெருமை சான்ற பூம்புகாரில் புகழ் பொருந்திய பெருங்குடியில் மாசாத்துவான் என்ற மாபெரு வணிகரின் மகனாராய்ப் பிறந்து, 'வாழ்தல் வேண்டி ஊழ்வினை துரப்ப' உன் நகரில் நுழைந்து, என் காற்சிலம்பை விற்கக் கருதிய நேரத்தில், உன்னால் கொலை செய்யப்பட்ட கோவலரின் மனைவி நான்; கண்ணகி என் பெயர்,' என்றாள் ஆத்திரம் பொங்கும் குரலில்—அனல் பொழியும் விழி

களோடு. அறிவு கெட்ட நிலையில் 'தற்கொலை ஆட்சி' நடத்திவிட்ட தார்வேந்தன், இந்நிலையி லும் தான் செய்த தவற்றைத் தானே உணரும் மதி பெற்றான் இல்லை. 'வாழ வந்தவரை வெட் டிச் சாய்த்தாயே! என் காற்சிலம்பை விற்க வந்தவர் உன்னால் கொலையுண்டாரே!' என்ற கண்ணகியின் மொழிகள் யாவும் ஆத்திரத்தால் அறிவிழந்த மன்னன் புத்தறிவு பெறப் பயன் படாமலே போய்விட்டன. மாறாக, 'அரசன்' என்ற அதிகார நினைப்போடு பதிலிறுத்தான் மன்னன்; 'கள்வனைக் கொல்வது கடுங்கோ லன்று,' என்றான். கேட்டாள் கண்ணகி. பொறுப்பாளோ? 'நல்வழி எதுவென அறி யாத கொற்கை மன்னனே, யார் கள்வன்? என் னுடைய பொற்சிலம்பின் உள்ளே இருப்பது மாணிக்கப்பரல்,' என்றாள். இதனால் அரசனின் அறியாமையைப் போக்கித் தன் கணவன் குற்ற மற்றவன் என்பதைத் தாமதமின்றி நிரூபிக்கத் துடித்த கண்ணகி பேச்சும் வாதமும் மேலும் வளர்வதற்கு இடமில்லாமல் செய்தாள். அரசன், 'அப்படியா! நன்று கூறினாய்! என் தேவியின் சிலம்பின் உள்ளே இருப்பன முத்துப்பரலே,' என்றான். 'எங்கே நீ வைத்திருக் கும் இணைச்சிலம்பு? தருக!' என்று கண்ணகி யின் கையிலிருந்த சிலம்பை வாங்கி அதோடு தான் முன் கோவலன்பாலிருந்து பெற்ற சிலம்பையும் மன்னன் நெடுஞ்செழியன் தன் முன்னே வைத்தான். வைத்ததுதான் தாமதம். அறிவோடு இயைந்த ஆத்திரமே வடிவான

கண்ணகி கண்ணெதிரே இருந்த தன் காற் சிலம்பை எடுத்துப் படீர் என்று உடைத்தாள்; தெறித்தது மாணிக்கப்பரல் பாண்டியன் முகத் தில்! தீர்ந்தது தென்னவன் ஆயுள்! தாழ்ந்த குடையனாய்த் தளர்ந்த செங்கோலனாய் தென்றமிழ் நாட்டு வேந்தன்,

'பொன்செய் கொல்லன் தன்சொற் கேட்ட
யானோ அரசன்! யானே கள்வன்!
மன்பதை காக்குந் தென்புலங் காவல்
என்முதற் பிழைத்தது! கெடுகவென் னாயுள்!'
(வழக்குரை காதை, 74-77)

என்று கூறி மயங்கி வீழ்ந்தான்.

தன் கணவன் உணர்வற்றுத் தரைமீது சாய்வது கண்டாள் உத்தம நங்கையாகிய பாண்டியன் மனைவி கோப்பெருந்தேவி; உள்ளம் குலைந்தாள்; உடல் நடுக்குற்றாள். 'தாய் தந்தையரை இழந்தோர்க்கு அம்முறை சொல்லிக் காட்டப் பிறர் உண்டு. ஆயின், கணவனை இழந்த கற்புடைய மங்கையர்க்கு அங்ஙனம் சொல்லிக் காட்டலாவது ஒன்றில்லை,' என்பதை உன்னினாள்; உணர்விழந்தாள்; வேந்தனின் இணையடியைத் தொட்டு வணங்கி, நிலத்தில் வீழ்ந்தாள். ஆம்! அல்வழிப்பட்ட பாண்டிநாட்டு அரியணை வெறிச்சிட்டுப் போயிற்று! தீ நெறிப்பட்ட வேந்தன் தன்னுயி ரைத் தானே மாய்த்துக் கொண்டான். அதோடு ஆற்றொணாத் துயர்கொண்ட கற்பரசி கண்ணகி விளைத்த அரசியல் புரட்சியின் முதற் கட்டமும் முடிந்தது.

# 8. தேசபக்திக்குச் சோதனை 

'எந்த ஒரு சமுதாயத்தில் அரசியல் தன் முழு வளர்ச்சியையும் பெற்றுத் திகழ்கிறதோ, சமூக உறவுகளும் கடமைகளும் மிகத் தெளிவாக உணரப்பெற்று மனிதனின் பிறபிற சமுதாய பந்தங்களிலும் பெரிதும் மேலானவையாக மதிக்கப்படுகின்றனவோ, அந்தச் சமுதாயத்திலேதான் நாட்டுப்பற்றுத் தன் தனிப்பட்ட முழுவளர்ச்சியையும் பெற்று விளங்குகின்றது என்பர். இத்தகைய நாட்டுப் பற்றுணர்ச்சி கிரேக்க நாட்டு 'நகர—அரசுகள்' செழித்திருந்தபோதும் ரோமப் பேரரசிலும் மிக உன்னத நிலையை அடைந்திருந்தது......'[1]

---

1. Patriotism, it is said, attains its most characteristic development only in a society where the state exists in its fully developed form and civic bonds and duties have come to be recognised explicitly and rated supreme among the social loyalties of man. This sort of patriotism reached a high point in the Greek City State and the Roman Empire State............ —*Encyclopedia of Social Sciences.*

ஆங்கில மொழியிலுள்ள சமூக அறிவியல் நூற்கலைக் களஞ்சியம் இவ்வாறு கூறுகிறது. ஆனால், ஆங்கில மொழியில் புலமையோடு மேற்குறித்த கலைக்களஞ்சியத்தில் கட்டுரை வரைந்தவர் இந்தியாவின் பண்டை வரலாற்றை—சிறப்பாக இன்பத் தமிழகத்தின் பெரு வரலாற்றை—அறியும் வாய்ப்பினை வாழ்க்கையில் பெறாதவர் போலும்! இல்லையேல், பழந் தமிழ் நாட்டு மக்களின் சீரிய நாகரிகமும் அதன் பயனாய் விளங்கிய அவர்கள் நாட்டுப்பற்றின் உயர்வும் அவர் உள்ளத்திலும் உரையிலும் இடம் பெற்றிருக்கும் அன்றோ?

செந்தமிழ் நாட்டு மக்கள் சங்க காலத்திலும் சிலப்பதிகார காலத்திலும் கொண்டிருந்த நாட்டுப்பற்றின் விழுப்பத்தினைப் பழந்தமிழ் இலக்கியம் நமக்குப் பறை சாற்றி அறிவிக்கிறது. அப்பெருநூல்களை ஊன்றிக் கற்கும் போது நந்தமிழ் முன்னோரின் நாட்டுப்பற்றைப் பற்றி நமக்கு விளங்கும் பற்பல உண்மைகளுள்ளும் தலை சிறந்த ஓர் உண்மை உண்டு. அதை நினையுந்தொறும் நம் உடல் சிலிர்க்கும்; நரம்புகளில் வீரமின்சாரம் விரைந்து பாயும். ஆம்! தமிழகத்தின் பொற்காலத்தில், அடல் வேல் ஆடவரேயன்றி, மகளிரும் வீரத் திருவினராய் விளங்கினர். இவ்வுண்மையை உறுதிப்படுத்த வல்ல எத்தனையோ இலக்கியச் சான்றுகள் தமிழ்க் களஞ்சியத்தில் நிறைந்து கிடக்கின்றன. அத்தகைய இலக்கியப் புகழும், வரலாற்றுச்

சிறப்பும் படைத்த வீரத்தமிழ் மகளிர் மரபில் பிறந்தவளே கண்ணகி. அவள் நெஞ்சில் நாட்டுப்பற்று நிறைந்திருந்தது. காதற்கணவனைக் கைப்பிடித்த திருநாளில் அவள் கேட்ட அரச வாழ்த்தை அவள் என்றேனும் மறக்க முடியுமோ? தன்னைச் சுற்றிலும் வாழும் தமிழ் மக்கள் அனைவர் நெஞ்சிலும்—அவர்கள் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் — குறைவின்றி விளங்கிய நாட்டுப்பற்றுணர்ச்சியை அவள் மட்டும் வெறுக்க இயலுமோ? இவ்வளவு ஏன்? தன் காதற்கொழுநன் உள்ளத்தில் ஊறிக்கிடந்த தமிழ் வேந்தர் பத்தியையும் தமிழகப் பத்தியையும் அறியாதவளோ அவள்? அல்லள். ஆயினும், அவள் வாழ்க்கையில் நேர்ந்த விபத்து—தவிர்க்க முடியாப் பெருவிபத்து—அவள் தேச பத்திக்கே சோதனையாய் நின்றது. ஆனால், அந்தச் சோதனையிலும் வெற்றியே கண்டாள் வீரக்கண்ணகி. அவளுக்கு நேர்ந்த சோதனையைப் போலவே பழுதின்றிப் பாண்டிநாட்டை ஆண்டு வந்த தார் வேந்தனின் தேச பத்திக்கும் பெருஞ்சோதனை நேர்ந்தது. ஆம்! மன்னனும் மனிதன் அல்லனோ? அவன் உள்ளத்திலும் தேச பத்தி என்ற ஊற்று, கண் திறந்து பெருகுமன்றோ? மக்களுக்கு 'மன்னனோ உயிர்' என மதிப்பது தேசபத்தி. இத்தகைய தேச பத்தி நிறைந்த மக்களின் பிரதிநிதியான கண்ணகிக்கும் சோதனை எழுந்தது! தமிழ் வேந்தரின் பிரதிநிதியான பாண்டியனுக்கும் சோதனை

விளைந்தது! ஆயினும், இருவரும் சோதனையில் வென்றனர்—வேறு வேறு வழிகளில்.

தன் கணவனுக்கு நேர்ந்த துயரை நினைந்து மனங்குமைந்து அழுது புலம்பி அந்நாளைய வழக்கம் போலக் கைம்மைக் கோலம் பூண்டு குடும்பச் சிறையில் — காலச்சிறையில்—அடை பட்டு மட்காமல், 'அல்வழிப்பட்ட ஆட்சி நமக்கு மட்டும் பகையன்று; புகழ் மலிந்த தமிழினத் தின் வரலாற்றிற்கே பகையானது; வாழ்தல் வேண்டி வந்தவனை வெட்டி வீழ்த்திய ஆட்சி முறை நமக்கு மட்டும் பகையன்று; நாட்டில் வாழும் அத்தனை மக்கட்குமே அது நஞ்சு,' எனக் கருதியது அவள் உள்ளம். உயிர்க்கு உயிரான வாழும் உரிமை பறிபோகும் நேரத் தில்—மக்களின் உயிரனைய வேந்தன் வஞ்ச னைச் செயல்களில் சிக்கிக் கிடக்கும் தருணத் தில்—துயரக் கண்ணீரில் மூழ்கிக் கிடப்பது கோழைமையென்று கருதினாள்; 'அறத்தை நிலை நாட்டும் போராட்டத்தில் அச்சத்திற்கும் நாணத்திற்கும் ஏது வாழ்வு?' என உன்னி னாள். மெய்யிற்பொடியும் கையில் தனிச்சிலம்பும் ஏந்திக் கண்ணீரும் கம்பலையுமாய்த் தீ நெறிப் பட்ட கோனாட்சியை அழிக்க மக்களின் சக்தி யாய்—அறத்தின் சக்தியாய் — உண்மையான தேசபக்தியின் மாசற்ற சக்தியாய்ப் புறப்பட் டாள் மன்னன் வாழும் கோயிலை நோக்கி; அறியாமையில் மூழ்கிக் கிடந்த அவன் பழிச் செயலை எடுத்துரைத்து இடித்துக் காட்டினாள்.

தான் எவ்வளவோ அல்லலுற்று அழுது புலம்பியது கண்டும் வெறும் 'பொட்டைப் புலம்பல்' புலம்பிய மதுரை மக்கள் கண்டு வியக்க—என்—மன்பதையே வாழ்த்தி வணங்க—வேந்தனை எதிர்த்து நீதிக்காக வழக்காடினாள் கண்ணகி. குடிமக்களின் வாழும் உரிமைக்காக அவள் போராடினாள். தீய வேந்தனது ஆட்சி தீர்ந்தொழியப் போராடினாள் அம்மாபத்தினி. தன் வாதத்தால் — வழக்குரையால் — இறந்த கணவனை எழுப்ப முடியாது என்பதை அறியாதவள் அல்லள் கண்ணகி; ஆயினும், வஞ்சகமற்ற குடிமகன் ஒருவனுக்குத் தீய வேந்தனால் ஏற்பட்ட தீச்சொல்லை அக்கணத்திலேயே துடைக்கத் துணிந்தாள். அதோடு 'குடிமகன் ஒருவன்மீது அடாத பழியைச் சுமத்தி அவனைக் கொலை புரியும் அளவிற்கு ஆட்சி ஒன்று இருக்குமானால்—அது எவ்வளவு நீண்ட பெரு வரலாறு உடையதாயினும்—அதை அழித்துத் தீருவதே தேசபத்தி; அதுவே கற்பு,' என்பதை அவள் தெளிந்திருக்க வேண்டும். அன்றேல், ஈராயிரம் ஆண்டுகட்குப் பின்னும் இன்னும் வழிகாட்டும் இலக்கியமாய்ப் போற்றத் தக்க ஒரு செயலை—அரசியல் புரட்சியை—அவள் செய்யத் துணிந்திருப்பாளோ? எண்ணிப்பாரா மற்கூட அவள் அந்த வீரச் செயலைச் செய்திருக்கலாம். ஆனால், அவளுடைய அப்புகழ் சான்ற செயலுக்கான தூண்டுகோல் அவள் உள் மனத்தில் ஊறிக் கிடந்த தேச பத்தியின் எழுச்சியாகவே இருந்திருக்க வேண்டும்.

கோவலன் தனிமனிதனே. ஆனால், அவன் கொலையை ஒரு தனி மனிதன் கொலையாகக் கருதிவிட முடியாது. அது அரசியற்கொலை. எனவே, கண்ணகி செய்த புரட்சியும் தன் கணவன் இறந்த துயரத்தால்—அவனைக் கொலை செய்தார்களே என்ற சீற்றத்தால்—எழுந்த புரட்சியாயினும், அது தேசபக்தி என்றமாசில்லாத தத்துவத்திற்கு மங்காத ஒரு விளக்கத்தைத் தரும் தலைசிறந்த அரசியற்புரட்சியாகும். ஆம்! கண்ணகி—பழந்தமிழ்ப் பெண்—தன்வாழ்க்கை வேறு, தன் நாட்டின் வாழ்க்கை வேறு என்று பிரித்துப் பார்த்துப் பகுத்துப் பேசும் பேதைமையை வளர்த்துக்கொள்ளவில்லை. அவளுக்கு அரசியல் வெறுந்தேர்தலோ அன்றிப் பணச்சூதோ அன்று; ஆட்சி நடக்கும் நிலப் பரப்பில் வாழும் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரை அனைத்துயிரையும் காக்க வேண்டிய புனித சக்தி அது. எனவே, அச்சக்தி பழுதுறுங்கால், அதை மாற்றவோ, முடியாவிடில்மாய்த்துப்புதிதாகப்படைக்கவோ வேண்டுவது அவள் கடமை. அத்தகைய தேசபக்தியையே தனக்குற்றதைப்போன்ற அவலநிலையில் தள்ளப்பட்ட ஒவ்வொருத்தியும் அஞ்சாது காட்ட வேண்டும். அதுவே தேச பக்தியோடு ஒன்றி நிற்கும் ஒப்பற்ற கற்பு நெறி—கடமை நெறி—என்பதை மன்பதைக்கு விளக்கிக் காட்டிய வாழ்க்கை சிலப்பதிகாரத் தலைவியின் சீரிய வாழ்க்கை.

இவ்வுண்மையை உலகுள்ளவரை அழியாச் சொல் ஓவியமாய் அமைத்துக் காட்டுகிறது மணிமேகலை.

'காதலர் இறப்பிற் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்காது
இன்னுயிர் ஈவர்; ஈயா ராயின்,
நன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவர்;
நளியெரி புகாஅ ராயின், அன்பரோடு
உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம்பு அடுவர்
பத்தினிப் பெண்டிர் பரப்புநீர் ஞாலத்து;
அத்திறத் தாளும் அல்லளெம் ஆயிழை;
கணவற் குற்ற கடுந்துயர் பொறாஅள்
மணமலி கூந்தல் சிறுபுறம் புதைப்பக்
கண்ணீ ராடிய கதிரிள வனமுலை
திண்ணிதின் திருகித் தீயழற் பொத்திக்
காவலன் பேரூர் கனையெரி யூட்டிய
மாபெரும் பத்தினி!'

(மணிமேகலை, காதை, 2 : 42–55.)

இவ்வாறு சிலப்பதிகாரச் செய்தியை மாதவியின் வாயால் சித்திரிக்கிறது மணிமேகலை.

அடுத்துப் பாண்டி நாட்டு வேந்தன் தன் தேசபத்திக்குற்ற சோதனையில் வெற்றி பெற்ற திறனைச் சிந்திப்போம்:

தவறுவது மனித இயற்கை. மனிதனாகிய மன்னனும் அதற்கு விலக்கல்லன். ஆனால், செய்த தவற்றை உணர்ந்ததும் மனந்திருந்தப் பெறுவதே பண்புடைமை. பாண்டிய மன்னன் தவறிழைத்தான்; இழைத்த பின்னும் தன்

பிழையை உணராது இருந்தான். கண்ணகி உணர்த்த உணர்ந்ததும் அவன் திருவாயிற் பிறந்த மணி மொழிகள்,

> 'பொன்செய் கொல்லன் தன்சொல் கேட்ட
> யானோ அரசன்! யானே கள்வன்!
> மன்பதை காக்கும் தென்புலங் காவல்
> என்முதற் பிழைத்தது! கெடுகஎன் ஆயுள்!'
> (வழக்குரை காதை, 74-77)

என்பனவேயாகும். ஆம்! கண்ணகி கற்பின் திண்மைக்கே புதியதொரு விளக்கம் தந்தாள்! அவ்வாறே பாண்டிய வேந்தன் குடிபுரந்தரும் பண்பிற்கே ஒரு புதுவிளக்கம் தந்தான்! தான் செய்த தவற்றை உணர்ந்த மன்னன், 'திருந்தி வாழ்வோம்' என ஆசை கொள்ளவில்லை; 'வீழ்ந்து சாவோம்' என்றே துடித்தான். இதனினும் சிறந்த தேசபத்தியும் பண்பாடும் உண்டோ? மான உணர்ச்சி நிறைந்த இத்தகைய தேசபத்தியும் பண்பாடும் பெறற்கருஞ் செல்வங்கள் என்பதை முற்றிலும் உணர வல்லார் யார்? பாண்டியனைப் போன்று முடி சூடி நாடாளும் ஒரு நல்வேந்தனாலேதான் அது இயலும். அந்த உண்மையையும் சிலப்பதிகார வஞ்சிக்காண்டம் செவ்விதின் உணர்த்துகிறது.

வீரமன்னனாகிய சேரன் செங்குட்டுவன் செந்தமிழ்ப்புலவர் சாத்தனார் வாயிலாக வீரக் கண்ணகியின் வரலாற்றைக் கேள்வியுற்றான்;

> 'கொற்ற வேந்தன் கொடுங்கோல் தன்மை
> இற்றெனக் காட்டி இறைக்குரைப் பனள்போல்
> நின்னாட் டகவயின் அடைந்தனள்.'

என்ற அத்தமிழ்ப் புலவரின் மொழிகள் அவன் உள்ளத்தைத் துளைத்தன. அவன் பெரிதும் வருந்தினன்; மனங்குழறினன். விரிந்து பரந்த நோக்கமே வடிவான அவ்வேந்தன் வாயி னின்றும் அமிழ்தினும் இனிய தமிழ்ச் சொற் கள் பிறந்தன. அவற்றை இளங்கோ அடிகள் எவ்வளவு அழகான தமிழில் குழைத்துத் தரு கிறார் பாருங்கள்!

'தென்னர் கோமான் தீத்திறங் கேட்ட
மன்னர் கோமான் வருந்தினன் உரைப்போன்:
'எம்மோ ரன்ன வேந்தர்க் குற்ற
செம்மையின் இகந்தசொற் செவிப்புலம் படாமுன்
உயிர்பதிப் பெயர்த்தமை உறுக ஈங்கென
வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது

* * * *

மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பம் அல்லது தொழுதக வில்.'

(காட்சிக்காதை, 93–104)

"'எம்மை ஒத்த அரசர் செவியில் நாம் முறை வழுவியதால் உண்டாய பழிச்சொல் சென்று சேர்வதற்குமுன் எம் உடலினின்றும் உயிர் நீங்கிவிட்டது என்ற சொல் சென்று சேர்வதாக!' என்று மாண்டானே பாண்டிய மன்னன்! ஊழ்வினையால் வளைந்த செங் கோலைத் தன் உயிரைக் கொடுத்தன்றோ மீண்டும் செங்கோலாக நிமிர்த்திவிட்டான்

பாண்டியன்! ....... குடிகளைக் காத்தலை மேற்கொண்டு கொடுங்கோலுக்கு அஞ்சி மக்கள் கூட்டத்தைப் பாதுகாக்கும் நல்ல அரசர் குடியிலே உதித்தல் துன்பம் தருவதல்லது போற்றத்தக்கது அன்று."

இவ்வாறு அச்சத்தோடும் வியப்போடும் கூறினன் வஞ்சி நாட்டு வேந்தன். ஆம்! ஒரு மன்னனை அவனை ஒத்த இன்னொரு மன்னனால் தானே முற்றிலும் புரிந்துகொள்ள முடியும்? தேசபக்தி நிறைந்த உள்ளத்தைத் தேசபக்தி நிறைந்த உள்ளத்தாலேதானே முற்றிலும் உணர்ந்து உருகிப் போற்றிப் புகழ முடியும்?

# 9. பத்தினியின் சபதம் ★ ★

பாண்டி வேந்தன் அரியணையினின்றும் பதறி வீழ்ந்தான். அது கண்ட கோப்பெருந் தேவி அவனிரு தாள்களையும் தொட்டு வணங்கி எல்லையில்லாத் துயருழந்து, உள்ளம் குலைந்து, உடல் நடுங்கி, 'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்!' என்று கதறி அழுது வீழ்ந்தாள்.

அக்காட்சியைக் கண்டாள் கண்ணகி. கோப்பெருந்தேவியின் இறுதி மொழிகள் அவள் இதயத்தில் பொங்கும் அவல உணர்ச்சியை அனல் கக்கும் எரிமலையின் வேகத்தைப் பெறுமாறு செய்தது. ஆருயிர்க் காதலனைச் சாவின் வாயில் அநியாயமாய்ப் பறிகொடுத்து அவதியுறும் அவளுக்கு மன்னனது மரணமும், மாபெருந்தேவியின் மறைவும் எம்மாத்திரம்! பிரளயமாய்ப் பொங்கி வரும் உணர்ச்சிக்

கடலாய் இருந்த அவள் உள்ளத்திற்கு இவ் விழவுகளால் ஆறுதல் கிட்டுமோ? அரசன் மாளினும், அரசி மடியினும், அனைத்துலகும் அழியினும் அவள் தன் அருமைக் கணவனை மீண்டும் கண்டு உய்தல் கூடுமோ? எனவே, அவள் எரிமலையானாள்.

> ‘இனியொ ருவிதி செய்வோம்;— அதை
> எந்த நாளும் காப்போம்;
> தனியொ ருவனுக் குணவி லையெனில்
> சகத்தி னையழித் திடுவோம்!’

என்று வீர முரசு கொட்டினார் சுதந்தரக் கவிஞர் பாரதியார். பாரதியாரின் பாட்டில் நாம் பார்க்கும் இந்த ஆத்திரத்தைத்தான் அன்னை கண்ணகியின் ஆவேசம் மிக்க சபதத்திலும் காண்கிறோம்; கேட்கிறோம். தனியொருவனுக்கு உணவில்லை எனில் அந்நிலைக்குக் காரணமாய் அமைந்த சமுதாயத்தையே—சகத்தினையே—சுட்டெரிக்க விரும்பியது விடுதலைக் கவிஞரின் தேசபக்தி. தனியொருவன் ‘வாழ்தல்’ வேண்டி வந்த இடத்தில் வஞ்சனைக் குட்பட்டு ஆள்வோன் வாளுக்கு இரையாயின், அவ்வரசை — அரசைக் காக்கும் அறமற்ற சமுதாயத்தை — அழிப்பதே கண்ணகியின் தேசபக்தி. இவ்வுண்மையை வஞ்சினமாலை நமக்கு விளக்கிக்காட்டுகிறது.

பாண்டி நாட்டரசிக்குத் தன் நெஞ்சக் கொதிப்பை மேலும் எடுத்துரைக்க வேண்டும் என்ற ஆத்திரம் கண்ணகிக்கு. ஆத்திரமிக்க

அங்கிலேயிலும் கண்ணகி தன் நாட்டின் பெரு மையை — பரம்பரையின் சிறப்பினை — புகாரின் புகழை—விரித்துப்பேசத் துடித்தாள். பாண்டி வேந்தன்முன் வழக்குரைத்த போது எவ்வாறு கண்ணகி தன் உள்ளத்திலிருந்த தமிழகப் பற்றிற்கு உயிராகத் தன் சோழ நாட்டுப் பற்றைப் புலப்படுத்தினள் என்று பார்த்தோமோ, அவ்வாறே ஈண்டுப் பாண்டி நாட்டு அரசியின்முன் 'சபதம்' செய்யும்போதும் தன் புகார்ப்பதியின் சிறப்பினைப் புகல்வதில் ஆர்வமும் ஆத்திரமும் அடைகின்றாள் கண்ணகி. மனித உள்ளத்தில் விழுது விட்டு வளரும் தேசபத்தி என்ற ஆலமரத்தின் சிறு விதை எதுவென அறிந்தார், கண்ணகியின் பேச்சை — உள்ளத்து உணர்ச்சியை — நன்கு உணர்வது எளிதன்றோ? பிறந்தஊரிடத்தில்— வாழும் பகுதியிடத்தில் — பற்றும் பத்தியும் இல்லாதார் நெஞ்சில் நாட்டுப்பற்று விளங்குமோ? தேசபத்தி ஓங்குமோ? எனவே, வாழும் ஊரிடத்தும் நாளும் மிக நெருங்கிப் பழகும் தாயகத்தின் பகுதியிடத்தும் மனித உள்ளத்திற்குத் தனித்ததொரு பற்றுதல் இருத்தல் இயற்கையும் பொருத்தமுமே ஆகும் அன்றோ? நம் தலைமுறையின் வாழ்விற்கு — அருமைப் பாரதத்தின் அரசியல் விடுதலைக்கு— ஒப்புவமை இல்லா வகையில் உள்ள நாளும் பாடு பட்டு உயிர் துறந்த உத்தமர்-இன்று நாம் உண்ணும் உப்பும் நுகரும் காற்றும் சுதந்தர

இந்திய மண்ணில் விளையும் உப்பாய்—விடுதலை பெற்ற தாயகத்தில் வீசும் காற்றாய் இருக்கச் செய்த வீரத்தலைவர் — இந்திய நாடு பெற்ற சர்வ 'தேசிய' ஞானிகளுள் தலை சிறந்த சத்தியவான்—நாற்பது கோடி மக்கள்வாழ 'ஜெய் ஹிந்த்' மந்திரம் தந்த தியாக மூர்த்தி—சுபாஷ் சந்திரர் என்ற உண்மையை அறியாத இந்தியக் குழந்தையும் உண்டோ? அவர் நனவே போலக்கண்ட 'இளைஞன் கனவி'லிருந்து எதிரொலிக்கும் பொன்மொழியை இங்கே காண்பது பொருத்தமுடையதாகும்:

'வங்காளிக ளிடையே ஒரு தனிப்பண்பு இருக்கிறது என்பது என் அசையா எண்ணம். கல்வியிலும் அவர்கள் கடைப்பிடிக்கும் நோன்பிலும் மனப்பான்மையிலும் இந்தத் தனிப் பண்பு வெளிப்படுகின்றது. வங்க நாட்டின் இயற்கைத்தோற்றத்திலும்—அதன் மண், நீர், வானம், வயல், நதி வளம் ஒவ்வொன்றிலும்—தனித் தன்மை இருக்கிறது.'[1]

எனவே, இது சர்வ தேசிய உள்ளம் கொண்ட சுபாஷ் பாபுவின் தேசபக்தி! இந்திய தேசபக்தியிலும் தாம் பிறந்து வளர்ந்து மகிழ்ந்து பண்பட்ட பூமியாகிய வங்காளத்திடத்திலேதான் அவருக்கு எவ்வளவு தனிப்பட்ட அன்பு!

* * * *

[1] இளைஞன் கனவு, பக்கம், 9

பாண்டிநாட்டு அரசியிடம் கண்ணகி கூறிய மொழிகளில் இத்தகைய அன்பையே—நாட்டுப் பற்றையே—நாம் காண்கிறோம்.

'கோ வேந்தன் தேவியே,யான் யாதுமறியாப் பாவியேன். எனினும், பிறர்க்கு முற்பகலில் கேடு செய்தார்க்குப் பிற்பகலிலேயே கேடு விளையும் அன்றோ?' என்று தமிழ்மறையின் குரல் எதிரொலிக்கப் பேசலுற்றாள் கண்ணகி நெஞ்சத் துயரோடு. அவள் அவல நெஞ்சின் நினைவில் பழங்கதைகள் யாவும் படம் படமாய் விரியலாயின. புகாரின் பெருமை—தன்னை ஈன்ற தலை நகரில் தோன்றிய பத்தினிப் பரம்பரையின் சிறப்பு—அவள் கவனத்திற்கு வந்தது. அப்பத்தினிப் பெண்டிருள் எழுவர் புகழை எடுத்தோதினாள். அவருள் ஒரு பத்தினிக்கு வன்னிமரமும் மடைப்பள்ளியும் சாட்சி பகர்ந்தன. 'காவிரிக்கரையிலுள்ள மணற்பாவையே நின் கணவனும்,' என்று மாதர் கூற, அலை வந்து அப்பாவையை அழியாதபடி காத்து நின்றாள் ஓர் உத்தமி. இசைப்புலமை வாய்ந்த கரிகால் வளவனின் மகள் **'ஆதிமந்தி'** என்பாள், ஆடல் பாடல்களில் பெரும்புலமை வாய்ந்த **'ஆட்டனத்தி'** என்ற வஞ்சிக் கோனை மணந்தாள். ஒரு நாள் அவனைக் கடல் நோக்கிக் காவிரி வெள்ளம் ஈர்த்துச் சென்றது. ஆதிமந்தி கணவனைத் தேடிச் சென்று கடற்கரையில் நின்று, 'கல் போலும் தோள் படைத்த என் வீரக் கணவரே,' என்று கூவி நின்றாள். அவள்

கற்பின் பெருமையால் கடல்கொண்ட நாயகன் கரைக்கு மீண்டான். மற்றொரு பத்தினி, திரவியம் தேடத் திரை கடலோடிய கணவன் கலமோட்டி மீளுமட்டும் கல்லாயிருந்து, அவன் வந்த பிறகே கல்லுரு நீங்கி உயிர்த்தெழுந்தாள். தன் கணவனுக்கு வாய்த்த தன்னை ஒத்த மற்றொரு மனைவியின் குழந்தை கிணற்றில் வீழ, அது குறித்து உலகோர் தன்மீது பழி சுமத்தாவண்ணம் தன்னுடைய குழந்தையையும் கிணற்றில் தள்ளிப் பின் அவ்விரு குழந்தைகளையும் ஊறின்றி அக்கிணற்றினின்றும் எடுத்தாள் ஒரு கற்பரசி.

மற்றொரு பாவை நல்லாள் வெளியே சென்ற கணவன் திரும்புமட்டும் தன் அழகுருவம் (பிறர் நெஞ்சு புகாதவாறு) குரங்கு முகம் கொண்டிருந்து, ஆருயிர்க் காதலனைக் கண்டபின் அழகு முகம் கொண்டாள். இளம் பருவ விளையாட்டில், 'எனக்குப் பிறக்கும் மகளுக்கு நீ பெறும் மகன் கணவனாகுக,' என்று கன்னியொருத்தி மற்றொரு கன்னிக்குக் கூறினள். பின்னர் அவ்விருவரும் பச்சிளம்பருவம் நீங்கிப் பொன்போல் மக்களைப் பெற்ற தாயர் ஆயினர். மகளைப் பெற்றவள் தன் தோழியிடம் வந்து, முந்தை நாள் பேசி முடித்த விந்தைப் பேச்சை நினைவூட்டி, அதைச் செயலாக்க வற்புறுத்தினள். அது கேட்ட மகனை ஈன்ற அன்னை, மனம் கவன்றாள். தாயின் நிலையும் நெஞ்சமும் அறிந்த தமிழ் மகள்,

கோடியுடுத்துக் கூந்தல் முடித்துத் தன் தாய் இளமையிற்குறித்த கொழுநன் முன் போந்து, தலை வணங்கினள்.

இத்தகைய பத்தினிப் பெண்டிரின் பாரோர் தொழுதேத்தும் பெருமையைக் கூறி முடித்துத் தன் உள்ளக் கொதிப்பின் விளைவான சபத மொழிகளைச் சொல்லலுற்றாள் அவள் :

'அரசியே, யான் பத்தினியர் பலர் பிறந்த பதியில் பிறந்தேன். நானுமோர் பத்தினியாவது சத்தியமாயின், அரசோடு மதுரையையும் ஒழிப்பேன்! என் பட்டிமையையும் காண்பாய் இனி நீ,' என்று வஞ்சினம் உரைத்து அரண்மனையை நீங்கினள் கண்ணகி; மதுரை நகரின் மக்களை நோக்கினள்; அவர்களிடமும் வீராவேசம் கொண்டு முழங்கினள்:

'மதுரை நகரத்துள்ள ஆடவரே, மகளிரே, யான் கூறுவதைக் கேளுங்கள்: என் ஆருயிர்க் காதலரைக் கொலை செய்த மன்னனது நகரத்தையே சீறினேன்! எனவே, நான் குற்றமிலேன்,' என்று கூவினள் கண்ணகி. ஆம்! அவளை அறியாமல் அவள் உள்ளம் 'சத்திய சோதனை'யில் ஈடுபட்டது போலும்! வெறி கொண்ட நேரத்திலும் அவள் மனச் சான்று 'விழித்த கண்' இமைக்கவில்லை. அதனாலே தான் அவள் தன் உள்ளத்தைத் தானே 'ஆத்தும சோதனை' செய்து முடிவு கூறும்

வகையில்—வையகத்தார் அனைவரும், 'கண்ணகி குற்றமற்றவள்; அல்லவை செய்தார்க்கு அறம் கூற்ருயிற்று,' என்பதை உணரும் வகையில்—

'கோநகர் சீறினேன் குற்றமி லேன்யான்.'

என்று முழங்கினுள் போலும்!

கண்ணகியின் ஆத்திரம் இவ்வாறு மக்கள் முன்பும் சபதம் கூறியதோடு அமையவில்லை. அவள் மேற்கொண்டு செய்த ஆவேசச் செயலைச் சிலப்பதிகாரம் சித்திரிக்கின்றது.

> 'இடமுலை கையால் திருகி மதுரை
> வலமுறை மும்முறை வாரா அலமந்து
> மட்டார் மறுகின் மணிமுலையை வட்டித்து
> விட்டாள் எறிந்தாள் விளங்கிழையாள்'
>
> (வஞ்சினமாலை, 43–46)

> 'பட்டாங் கியானுமோர் பத்தினியே யாமாகில்
> ஒட்டே னரசோ டொழிப்பேன் மதுரையுமென்
> பட்டிமையுங் காண்குறுவாய்.'
>
> (வஞ்சினமாலை; 36–38)

இதுவே தீ நெறிப்பட்ட ஆட்சியை—அதைச் சுற்றி வளைத்து நிற்கும் சமுதாயத்தை—சுட்டெரிக்கப் பத்தினி இட்ட சாபம். இது பலிக்காமல் போகுமா?

# 10. பரம்பரைப் பண்பு  

பத்தினி சாபம் பலித்தது. தீ நெறிப்பட்ட கோவேந்தனது திருவீழ் நகரை—மதுரையை—நோக்கித் தாய்மைக்கோர் அடையாளமான தன் உறுப்பைத் திருகி எறிந்த வீரக்கண்ணகியின் முன் நீலமேனியும் செஞ்சடையும் பால் வெண்பல்லும் பார்ப்பனக்கோலமும் கொண்டு தோன்றினன் அக்கினித்தேவன். வீரபத்தினியின்முன் தலைவணங்கிப் பயபத்தியுடன் அவன் பேசலானன். இந்நிகழ்ச்சி வெறுங்கற்பனையே எனக் கருதுவோரும் கற்புடை மங்கையின் முன் இயற்கையும் தீயும் கை கட்டி வாய் புதைத்து, இட்ட கட்டளையை ஏற்று முடிக்கக் காத்திருக்கும் என்ற கருத்தைக் காவியத்தின் ஆசிரியர் நயம்பட உணர்த்தும் திறத்தை உணர்ந்து போற்றுமல் இருக்கமுடியாது. 'அன்புக்கு ஊறு இழைப்போரை—காதலுக்குக்கேடு

விளைப்போரை—கற்புக்குப் பங்கம் புரிவோரை —இயற்கையே எதிர்த்து அழித்து ஒழிக்கும்; அறமே ஆவேசம் கொண்டு ஒறுக்கும்,' என்பது இளங்கோ அடிகள் கருத்து மட்டும் அன்று. பழந்தமிழ் நூல்களாகிய சங்க இலக்கியங்களை யாத்த பொய்யறியாப் புலவர் பலர்க்கும் உடன்பாடான கொள் கையே அது. சான்று ஒன்றைக் காண்போம்:

குறிஞ்சி நிலம் காதலின் பிறப்பிடம். அருவியாடச் சென்றாள் ஓர் அணங்கு. வெள்ளம் இழுத்துச்சென்றது அவளை. வீரன் ஒருவன் பாய்ந்தான் இழுத்துச்செல்லும் வெள்ளத்தை எதிர்த்து. அவன் கையில் சிக்கினாள் ஏந்திழை யாள். இரு இணை விழிகளும் ஒன்றையொன்று கவ்வின; கலந்தன. புனல் வெள்ளம் மறைந் தது; காதல் வெள்ளம் பெருகியது. அருவி வேகத்தினின்றும் தப்பினாள் அம்மங்கை; அன்பு வெள்ளத்தினின்றும் தப்புவது அறி யாது திகைத்தாள். இந்நிலையில் அவள் காத லன் வீட்டார் 'வரிசை' கொண்டு அவளை மணம்பேச வந்தனர். மலையருவி சான்றாய்த் தம் மகள் ஒரு தமிழ்வீரனை மணங்கொண்டாள் என்பதைப் பெண்ணைப் பெற்றோர் எவ்வாறு அறிவர் ? எனவே, திருமணத்திற்கு உடன்பட மறுத்தனர்; பெண்ணைப் பெற்ற செருக்கால் பேசினர். அந்தோ! அவர் அறியாமையை என்னென்பது! நெருக்கடி நிறைந்த இந்நிலை யில் அறிவும் உணர்வும் அனுபவமும் ஒருங்கே

அமைந்த தலைவியின் தோழி, சிக்கல் போக்கிச் சீர்மை பெற வழி செய்தாள்; யாருமறியா நிலையில் நிகழ்ந்த 'களவு'ச் செய்தியை மகளைப் பெற்றோர்க்கு மெல்ல உரைத்தாள்; 'அருவியில் சிக்கிய தலைவி அன்பர் ஒருவரின் அணைப்பில் சிக்கினாள். அன்றுமுதல் அவள் கன்னியல்லள்—காதலி—கற்புடைய மங்கை; சிறுமியல்லள்—'அருமழை தரல் வேண்டினும்' பெய்யெனப் பெய்விக்கும் பெருமையள்,' என்று விளக்கினாள். பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் வேறொரு பேருண்மையையும் அவள் எடுத்து விளம்பினாள்.

'சிறுகுடி யீரே! சிறுகுடி யீரே!
வள்ளிகீழ் வீழா! வரைமிசைத் தேன்தொடா!
கொல்லை குரல்வாங்கி ஈனா! மலைவாழ்நர்
அல்ல புரிந்தொழுக லான்.'

(கலித்தொகை, 39.)

'சிறு குடியீரே, சிறுகுடியீரே, மலையில் வாழும் நீங்கள் அன்பு வாழ்க்கைக்கு — காதல் நெறிக்கு — கற்பு ஒழுக்கத்திற்கு — ஊறு புரிந்தால், இயற்கை உங்களைச் சாடும்; வள்ளிக் கிழங்குகள் வேர் விடா; மலைமேல் தேன் கூடு கட்டப்படமாட்டா; கொல்லையில் தினைகள் கதிர் விடா,' என்று இவ்வாறு 'அறத்தொடுநின்று' தோழி அறிவுரை பகர்ந்தாள்.

பழந்தமிழ்ப் பெண்ணின் இப்பேச்சை இன்று கபிலரின் கலித்தொகைப் பாடலாகிய ஒலித்தட்டில் கேட்கலாம். சங்ககாலத் தமிழ் மகள் ஒருத்திக்கு அறத்தின் ஆற்றலில் — கற்

புடை மங்கையின் பொருட்டுக் கடவுட்சத்தி யான இயற்கையும் ஏவல் கேட்கும் என்னும் கொள்கையில் — இருந்த உறுதிப் பாட்டை உணர்ந்து உள்ளம் பூரிக்கலாம்.

சங்க காலத் தமிழ்ப் பெண்ணின் சரியான கான்முளையன்றோ வீரக் கண்ணகி! அவளுக்கும் இந்த உறுதி இருக்கும் அன்றோ? இவ்வுறுதிப்பாட்டைத் தாம் எழுதும் காவியத்தில் எதிரொலிக்கச் செய்வது தமிழ்க் கவிஞரின் கடமை அன்றோ? இக்கடமையை இலக்கிய உள்ளம் படைத்தார் எவரும் போற்றும் வகையில் வழுவாது ஆற்றியுள்ளார் சிலப்பதிகார ஆசிரியர் என்பதை அவர் காவியத்தைக் கருத்தூன்றிக் கற்பார் அறிந்து இன்புறலாம்.

திருமா பத்தினியின் முன் தோன்றிய தீக் கடவுள், 'மாபெரும்பத்தினியே, நினக்கு அநீதி புரிந்த நாளில் இப்பெருநகரைத் தீக்கு இரையாக்க வேண்டுமென்றதொரு கட்டளை எனக்கு முன்னமே உண்டு. எனவே, யான் என் கடமையைச் செய்யப் போகின்றேன். கட்டளை ஏதும் இருந்தால் இடுக. என் தீக்கரங்களினின்றும் தப்புதற்கு உரியார் யார்?' என்றான். ஆம்! மீண்டும் கண்ணகியின் தேசபத்திக்கு ஒரு சோதனை நேர்ந்தது.

சிந்தனை தேக்கிய முகத்தினளாய் நின்ற கண்ணகி, அவ்வமயம் அக்கினிக் கடவுட்குக் கூறிய அமிழ்தனைய பதில், பொன் எழுத்துக்

களால் பொறிக்கத்தக்க சிறப்பு வாய்ந்த தாகும். ஆவேசத்தின் கொடுமுடியில் நின்ற நேரத்திலும் அவள் அறவுணர்வு பிறழக்க வில்லை; அவள் தேசபக்தி மாசுறவில்லை. கண்ணகியின் எதிரிகள், அநீதி புரிந்த கோவேந்தனும் அவனை ஆதரித்து நிற்கும் அற மற்ற சுமடர் கூட்டமுமே! அவர்களையே சாய்த் துத் தள்ளிக் 'காடெல்லாம் விறகான செய்தி' போல ஆக்கத் துடித்தாள் கண்ணகி. எனவே, தெளிந்த மதியோடு திடமான குரலில் பதி விறுத்தாள் கண்ணகி:

> 'பார்ப்பார் அறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்
> மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டுத்
> தீத்திறத்தார் பக்கமே சேர்க!'
>
> (வஞ்சினமாலை, 53–55)

'அந்தணர், அறவோர், பசு, கற்புடைய மங்கை யர், முதியோர், குழந்தைகள் ஆகிய இவர்களை விட்டுவிடுக. கொடுமை புரிந்த கோவேந்த னுக்கு உறுதுணையாக இருக்கும் தீயோரையே சுட்டுப் பொசுக்குக!' என்று கட்டளை இட்டாள் வீரபத்தினி.

கண்ணகியின் இந்த வார்த்தைகளில் இன் றைய நூற்றாண்டு வல்லரசுகளிடமும் காண முடியாத தேச பத்தியையும் கருணையையும் அன்றோ காணமுடிகிறது! பகைநாடு என்றால் நோயாளிகள் முடங்கிக் கிடக்கும் மருத்துவச் சாலையென்றும் சிட்டுக் குருவிகள் போலப்